ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸார ஸங்க்ரஹம் -3 (24) வ-5

"ஸ்ரீ சங்கர க்ருபா அனுபந்தம்"

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥

# श्रीजगद्गुरुग्रन्थमाला-२४





ॐ



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா

24

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्री जगद्गुरुग्रन्थमाला–२४

## सर्ववेदान्तसिद्धान्तसारसंग्रहः

(तृतीयः अंशः)



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா–24

## ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹம்

(மூன்றாம் பகுதி)

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்,
ஸ்ரீரங்கம்.

1970

21-5



॥ श्रीगुरुभ्यो नमः ॥

# ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை

ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலாவில் இது 24-வது மலர் இதில் ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸார ஸங்கிரஹத்தில் மூன்றுவது பகுதி (430-வது சுலோகம் முதல் 631-வது சுலோகம் முடிய) வழக்கம்போல் தமிழில் பதவுரை கருத்துரைகளுடன் வெளிவந்துள்ளது.

இதில் ஸ்தூல பிரபஞ்ச ஸிருஷ்டி, அத்யாஸம் ஆவரண விக்ஷேப சக்திகள், மாயை, ஆத்ம ஸ்வருபத்தைப்பற்றி பல வாதிகளின் கொள்கைகளும் அதன் நிராகரணமும் ஆத்மா ஸச்சிதாநந்த ஸ்வருபம் இது முதலான பல விஷயங்கள் குரு சிஷ்யர்களின் வினு விடை ரூபமாக நன்கு விளக்கப்பட்டு உள்ளன. எது ஆத்மா எது அநாத்மா என்பதைப் பிரித்து நன்கு தெரிந்துகொள்வதற்காகக் காட்டப்பட்டுள்ள விவாதத்தில் புத்ராத்மவாதம் முதல் சூன்யாத்மவாதம்வரை எல்லாவாதிகளின் கொள்கைகளேயும் வரிசையாகக் காட்டி இருப்பதோடு ஒவ்வொருவரும் பிறர் கூறும் யுக்திகளேக் கண்டிப்பதாகவும் காட்டியிருப்பதால் எல்லா வாதங்களும் தவறுதான் என்பதை நிரூபிக்கிருர். கடைசியில் எஞ்சியுள்ள சூன்யவாதத்தைத் தக்க யுக்திகளால் நிராகரித்து ஆத்மா ஸச்சிதானந்த ஸ்வருபன் என்பதை குரு சிஷ்யனுக்கு உபதேசிக்கிருர்.

வழக்கம்போல் இதற்குத் தமிழில் கருத்துரை எழுதித் தந்த ஸ்ரீ ஞானுனந்த பாரதீ ஸ்வாமிகளுக்கு நம் ஸமிதியின் சார்பில் வந்தனங்களேத் தெரிவித்துக்கொள்கிறேன். இதற்கு பதவுரை எழுதிக்கொடுத்து அச்சுக்கு தயார் செய்து திருத்தி உதவிய "ஸ்ரீ சங்கர கிருபா" உதவி ஆசிரியர் ஸ்ரீ K. S. வெங்கடராம சாஸ்திரிகளுக்கும் இதை அழகிய முறையில் அச்சிட்டுக்கொடுத்த ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ் அச்சகத் தாருக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிருேம்.

K. V. சுப்பரத்னம் அய்யர்,
பொதுக்காரியதர்சி
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி

உ-ட



---

(அ) முக்தியில் கொஞ்சம் ஆத்மஸ்வரூபத்தை சுட்டிக் காட்டிவிட்டு முன்சொல்லி வந்த ஸ்ருஷ்டிக்கிரமத்தையே மேலால் தொடர்ந்து சொல்லுகிறார் :—

आत्मानात्मविवेकं स्फुटतरमग्रे निवेदयिष्यामः ।
इममाकर्णय विद्वन् जगदुत्पत्तिप्रकारमावृत्त्या ॥ ४३० ॥

ஆத்மாநாத்ம விவேகம் ஸ்புடதரமக்ரே நிவேதயிஷ்யாம: ।
இமமாகர்ணய வித்வன் ஜகதுத்பத்தி ப்ரகார
மாவ்ருத்த்யா ॥

विद्वन्-அறிவுள்ளவனே! आत्मानात्मविवेकं-ஆத்மா, அநாத்மா இவைகளின் விவேகத்தை, स्फुटतरं-மிகத்தெளிவாக, अग्रे-மேலே, निवेदयिष्यामः-தெரிவிக்கப் போகிறோம். इमं-இந்த, जगदुत्पत्तिप्रकारं-பிரபஞ்சம் உண்டாகும் முறையை आवृत्त्या-திருப்பவும், आकर्णय-கேள்.

ஆத்மாவையும் அநாத்மாவையும் பிரித்துப் பார்க்க வேண்டியதை மேலால் மிகவும் தெளிவாகத் தெரிவிக்கிறோம். இப்பொழுது, ஹே வித்வன், மறுபடியும் சொல்லப்படும் இந்த ஜகத்தின் உத்பத்தியின் பிரகாரத்தை கவனமாகக் கேள்.

पञ्चीकृतेभ्यः खादिभ्यो भूतेभ्यस्त्वीक्षयेशितुः ।
समुत्पन्नमिदं स्थूलं ब्रह्माण्डं सचराचरम् ॥ ४३१ ॥

பஞ்சீக்ருதேப்ய: காதிப்ய: பூதேப்யஸ்த்வீக்ஷயேசிது: ।
ஸமுத்பந்நமிதம் ஸ்தூலம் ப்ரஹ்மாண்டம் ஸசராசரம் ॥

ईशितुः-ஈசுவரனுடைய, ईक्षया-ஸங்கல்பத்தால், पञ्चीकृतेभ्यः-பஞ்சீகரணம் செய்யப்பட்ட, खादिभ्यः-ஆகாசம் முதலான, भूतेभ्यः-பூதங்களிலிருந்து, सचराचरं-சராசரங்களுடன் கூடிய, स्थूलं-ஸ்தூலமான, इदं-இந்த, ब्रह्माण्डं-பிரஹ்மாண்டம், समुत्पन्नम्-உண்டானது.

பஞ்சீகரணம் செய்யப்பட்ட ஆகாசம் முதலான பூதங்களிலிருந்து ஈசுவரனுடைய ஸங்கல்பத்தினால், ஆசையும்

பொருள் அசையாப் பொருள் அடங்கிய இந்த ஸ்தூலமான பிரஹ்மாண்டம் ஏற்பட்டது. (431)

व्रीह्याद्योषधयः सर्वाः वायुतेजोम्बुभूमयः ।
सर्वेषामप्यभूत् अन्नं चतुर्विधशरीरिणाम् ॥ ४३२ ॥

வ்ரீஹ்யாத்யோஷதய: ஸர்வா வாயுதேஜோம்புபூமய: I
ஸர்வேஷாமப்யபூதந்நம் சதுர்விதசரீரிணாம் I

सर्वाः—எல்லா, व्रीह्याद्योषधयः—நெல் முதலான தான்யங்களும், वायुतेजोम्बुभूमयः—வாயு, தேஜஸ், ஜலம், பூமி இவைகளும், चतुर्विधशरीरिणां—நான்குவித சரீரங்களுள்ள, सर्वेषामपि எல்லோருக்கும், अन्नं—அன்னமாக, अभूत्—ஆனது.

தான்யம் முதலான எல்லா ஓஷதிகளும், வாயு, தேஜஸ், ஜலம், பிருதிவீ இவைகளும், நான்குவித சரீரங்களையுடைய யாவருக்கும் அன்னமாக ஏற்பட்டது. (432)

केचित् मारुतभोजनाः खलु परे चन्द्रार्कतेजोशनाः
केचित् तोयकणाशिनोऽपरिमिताः केचित्तु मृद्भक्षकाः ।
केचित् पर्णशिलातृणादनपराः केचित्तु मांसाशिनः
केचित् व्रीहियवान्नभोजनपराः जीवन्त्यमी जन्तवः ॥ ४३३ ॥

கேசின் மாருதபோஜநா: கலு பரே சந்த்ரார்க்கதேஜோசநா:
கேசித் தோயகணாசிநோऽபரிமிதா: கேசித்து ம்ருத்பக்ஷகா: II
கேசித் பர்ணசிலாத்ருணாதநபரா: கேசித்து மாம்ஸாசிந:
கேசித் வ்ரீஹியவாந்ந போஜநபரா ஜீவந்த்யமீ ஜந்தவ: I

केचित्—சில, मारुतभोजनाः—காற்றை உணவாகக் கொண்டும், परे—மற்றவை, चन्द्रार्कतेजोशनाः—சந்திர சூரியர்களுடைய ஒளியை அன்னமாகக்கொண்டும், केचित्—சில, तोयकणाशिनः—ஜலத்திவிலையை சாப்பிட்டுக்கொண்டும், अपरिमिताः—எண்ணற்ற, केचित्तु—சில, मृद्भक्षकाः—மண்ணைத் தின்றுகொண்டும், केचित्—சில, पर्णशिलातृणादनपराः—இலை, கல், புல், இவை

களைத்தின்பதில் ஈடுபட்டும், केचित्-சில, मांसाशिनः-மாம்ஸத்தை சாப்பிட்டுக்கொண்டும், केचित् சில, व्रीहियवान्नभोजनपराः-நெல், யவை, இந்த அன்னத்தை சாப்பிடுவதில் ஈடுபட்டும், अमी-இந்த, जन्तवः-பிராணிகள், जीवन्ति-வாழ்கிறார்கள்.

சிலர் காற்றையே புஜிப்பவர்கள் என்று பிரஸித்தம். வேறு சிலர் சந்திரனுடையவும் ஸூர்யனுடையவும் கிரண ஒளியை சாப்பிடுகிறார்கள். சிலர் ஜலத்தின் திவிலைகளை சாப்பிடுகிறார்கள். கணக்கிலடங்காத சிலர் மண்ணையே சாப்பிடுகிறார்கள். சிலர் இலை, கல், புல் இவைகளை சாப்பிடுவதில் ஈடுபட்டிருக்கிறார்கள். சிலர்களோ மாம்ஸத்தை சாப்பிடுகிறார்கள். சிலர் நெல் யவம் முதலியதையே அன்னமாக புஜித்து வருகிறார்கள். இவ்விதமாக இந்த பிராணிகள் (பல விதமாக) ஜீவித்துக்கொண்டிருக்கிறார்கள். (433)

जरायुजाण्डजस्वेदजोद्भिज्जाताः चतुर्विधाः ।
स्वस्वकर्मानुरूपेण जातास्तिष्ठन्ति जन्तवः ॥ ४३४ ॥

ஜராயுஜாண்டஜ ஸ்வேதஜோத்பிஜ்ஜாதாச்சதுர்விதா: ।
ஸ்வஸ்வகர்மாநுரூபேண ஜாதாஸ் திஷ்டந்தி ஜந்தவ: ॥

जन्तवः-பிராணிகள், स्वस्वकर्मानुरूपेण-தன் தன் கர்மாவுக்குத் தக்கவிதமாக, जरायुज-ஜராயுஜம், अण्डज-அண்டஜம் स्वेदज-ஸ்வேதஜம், उद्भिज्जाताः - உத்பிஜ்ஜம் (என்று). चतुर्विधाः-நான்குவிதமாக, जाताः-பிறந்தவைகளாக, तिष्ठन्ति-இருக்கின்றன.

ஜந்துக்கள் அவரவர்கள் கர்மாக்களுக்கு அனுரூபமாக ஜராயுஜங்கள், அண்டஜங்கள், ஸ்வேதஜங்கள், உத்பிஜ்ஜங்கள் என்று நான்குவிதமாக பிறந்து இருந்துவருகிறார்கள்.

येऽत्र जाता जरायुभ्यः ते नराद्या जरायुजाः ।
अण्डजास्ते स्युरण्डेभ्यो जाता ये विहगादयः ॥ ४३५ ॥
स्वेदाज्जाताः स्वेदजास्ते यूका लूक्षादयोऽपि ये ।
भूमिमुद्भिद्य ये जाता उद्भिज्जास्ते द्रुमादयः ॥ ४३६ ॥

யோத்ர ஜாதா ஜராயுப்யஸ்தே நராத்யா ஜராயுஜா: I
அண்டஜாஸ் தே ஸ்யுரண்டேப்யோ ஜாதா
யே விஹகாதய: II
ஸ்வேதாத் ஜாதா: ஸ்வேதஜாஸ்தே யூகா
லூக்ஷாதயோऽபி ச I
பூமிமுத்பித்ய யே ஜாதா உத்பிஜ்ஜாஸ் தே த்ருமாதய: II

अत्र-இவற்றில், ये-எவர்கள், जरायुभ्यः-கர்ப்பாசயத்திலிருந்து, जाताः-பிறந்தவர்களோ, ते- அந்த, नराद्याः-மனிதர் முதலியவர்கள், जरायुजाः-ஜராயுஜங்கள், ये-எந்த, विहगाद्याः பறவை முதலியவைகள், अण्डेभ्यः-முட்டைகளிலிருந்து, जाताः-பிறந்தனவோ, ते-அவைகள், अण्डजाः स्युः-அண்டஜங்களாக ஆகும் ये-எந்த, यूकाः-பேன்களும், लूक्षाद्योऽपि புழு முதலியவைகளும், स्वेदात्-புழுக்கத்திலிருந்து, जाताः-உண்டானவைகளோ, ते-அவைகள், स्वेदजाः-ஸ்வேதஜங்கள், ये-எந்த, द्रुमाद्यः-மரம் முதலியவைகள் भूमिं-பூமியை, उद्भिद्य-பிளந்து, जाताः-உண்டானவையோ, ते-அவைகள், उद्भिज्जाः-உத்பிஜ்ஜங்கள்.

அவர்களில் கர்ப்பப்பையிலிருந்து உண்டாகும் மனிதன் முதலானவர்கள், ஜராயுஜர்கள். முட்டையிலிருந்து உண்டாகும் பக்ஷி முதலியவைகள் அண்டஜங்கள். புழுக்கத்திலிருந்து உண்டாகிற பேன் புழு முதலியவை, ஸ்வேதஜங்கள் பூமியைப் பிளந்துகொண்டு உண்டாகின்ற மரம் முதலியவை, உத்பிஜ்ஜங்கள். (435-436)

(அ) இவ்விதமாக ஸ்தூல ஸ்ருஷ்டியை சொல்லிவிட்டு முன் காரண சரீர விஷயமாயும் ஸூக்ஷ்ம சரீர விஷயமாயும் ஸமஷ்டி வியஷ்டி என்று பிரித்துக் காட்டினதுபோல், ஸ்தூல சரீரத்திலும் அப்படியே ஸமஷ்டி வியஷ்டி என்ற வியவஹாரம் உண்டென்பதைக் காட்டுகிறார். :—

इदं स्थूलवपुर्जातं भौतिकं च चतुर्विधम् ।
सामान्येन समष्टिः स्यात् एकधीविषयत्वतः ॥ ४३७ ॥

இதம் ஸ்தூலவபுர்ஜாதம் பௌதிகம் ச சதுர்விதம் I
ஸாமான்யேன ஸமஷ்டி: ஸ்யாதேகதீவிஷயத்வத: II

**इदं**-இந்த, **भौतिकं**-பூதத்திலிருந்து உண்டான, **चतुर्विधं**-நான்குவிதமான **स्थूलवपुर्जातं च** ஸ்தூலசரீரமெல்லாம் சேர்ந்து **सामान्येन**-பொதுவாக, **एकधीविषयत्वतः**-ஒரே பாவனைக்கு விஷயமாவதால், **समष्टिः स्यात्** -ஸமஷ்டி ஆகும்.

பூதங்களிலிருந்து உண்டான நான்குவிதமான இந்த ஸ்தூல சரீரங்களின் கூட்டம் சேர்ந்து ஒரே இனமாயிருந்து ஒரே பாவனைக்கு விஷயமாகக் கூடியதால் ஸமஷ்டியாகும்.

एतत्समष्ट्यवच्छिन्नं चैतन्यं फलसंयुतम् ।
प्राहुः वैश्वानर इति विराडिति च वैदिकाः ॥ ४३८ ॥

*ஏதத் ஸமஷ்ட்யவச்சின்னம் சைதன்யம் பல ஸம்யுதம் ।*
*ப்ராஹுர் வைச்வாநர இதி விராடிதி ச வைதிகா: ॥*

**एतत्समष्ट्यवच्छिन्नं**-இந்த ஸமஷ்டி சரீரத்துடன் கூடியதும், **फलसंयुतं**-பிரதிபிம்பத்துடன் கூடியதுமான, **चैतन्यं**-சைதன்யத்தை, **वैश्वानर इति**-வைச்வாநரன் என்றும், **विराट् इति च**-விராட் என்றும், **वैदिकाः**-வேதம் உணர்ந்தவர்கள், **प्राहुः**-கூறுகிறார்கள்.

இந்த ஸமஷ்டி ஸ்தூல சரீரத்தினால் வரையறுக்கப்பட்டிருக்கும் சைதன்யத்தை பிரதிபிம்பத்துடன் சேர்த்து வைசுவாநரர் என்றும் விராட் என்றும் வைதிகர்கள் சொல்கிறார்கள். (438)

वैश्वानरो विश्वनरेष्वात्मत्वेनाभिमानतः ।
विराट् स्यात् विविधत्वेन स्वयमेव विराजनात् ॥ ४३९ ॥

*வைச்வாநரோ விச்வநரேஷ்வாத்மத்வேநாபிமாநத: ।*
*விராட் ஸ்யாத் விவிதத்வேன ஸ்வயமேவ விராஜநாத் ॥*

**विश्वनरेषु**-எல்லா பிராணிகளிடத்திலும், **आत्मत्वेन**-தானாக, **अभिमानतः**-அபிமானத்தால், **वैश्वानरः**-வைச்வாநரராகவும் **विविधत्वेन** பலவிதமாக, **स्वयमेव**-தானே, **विराजनात्**-பிரகாசிப்பதால், **विराट् स्यात्**-விராட் ஆகவும் ஆகிறார்,

இவர் எல்லா பிராணிகளிடத்திலும் தான் என்று அபிமானிப்பதால் வைசுவாநரர். தானே பலவிதமாக பிரகாசிக்கிறபடியால் விராட். (439)

चतुर्विधं भूतजातं तत्तज्जातिविशेषतः ।
नैकधीविषयत्वेन पूर्ववत् व्यष्टिरिष्यते ॥ ४४० ॥

*சதுர்விதம் பூதஜாதம் தத்தஜ்ஜாதிவிசேஷத: ।*
*நைகதீவிஷயத்வேந பூர்வவத் வ்யஷ்டிரிஷ்யதே ॥*

**चतुर्विधं**-நான்குவிதமான, **भूतजातं**-பிராணி ஸமூஹம், **तत्तज्जातिविशेषतः**-அந்தந்த ஜாதியின் தனித்தன்மை மூலம், **नैकधीविषयत्वेन** - பல பாவனைக்கு விஷயமாவதால், **पूर्ववत्**-முன் போல், **व्यष्टिः इष्यते**-வியஷ்டியாக கருதப் படுகிறது.

நான்குவிதமான பிராணி ஸமூஹம் அந்தந்தப் பிறவி தனித்தனியேயிருப்பதால் அநேகம் பாவனைக்கு விஷய மாவதால், முன்போலவே, வியஷ்டிஎனக் கருதப்படுகிறது.

साभासं व्यष्ट्युपहितं तत्तादात्म्यमुपागतम् ।
चैतन्यं विश्व इत्याहुः वेदान्तनयकोविदाः ॥ ४४१ ॥

*ஸாபாஸம் வ்யஷ்ட்யுபஹிதம் தத்தாதாத்ம்யமுபாகதம் ।*
*சைதன்யம் விச்வ இத்யாஹுர் வேதாந்தநய கோவிதா: ॥*

**व्यष्ट्युपहितं**-வ்யஷ்டி ஸ்தூல சரீரத்தை உபாதியாகக் கொண்டு, **तत्तादात्म्यं उपागतं**-அதனுடன் அபேதத்தை யடைந்த, **साभासं**-ப்ரதி பிம்பத்துடன் கூடிய, **चैतन्यं**-சைதன்யத்தை, **विश्व इति**-விசுவன் என்று, **वेदान्तनयकोविदाः**-வேதாந்த முறையறிந்தவர்கள், **आहुः**-சொல் கிறார்கள்.

வியஷ்டி ஸ்தூல சரீரத்தை உபாதியாயுள்ளதாயும் அந்த வியஷ்டியின் தன்மையை அடைந்ததாயுமுள்ள சைதன்யத் தை அதன் பிரதிபிம்பம் உள்பட, விசுவனென்று வேதாந்த முறை யறிந்தவர்கள் சொல்கிறார்கள். (441)

विश्वस्मिन् स्थूलदेहेऽत्र स्वाभिमानेन तिष्ठति ।
यतस्ततो विश्व इति नाम्ना सार्थो भवत्ययम् ॥ ४४२ ॥

விச்வஸ்மின் ஸ்தூலதேஹேZத்ர ஸ்வாபி
மானேன திஷ்டதி ।
யதஸ் ததோ விச்வ இதி நாம்நா ஸார்த்தோ பவத்யயம் ॥

यतः-ஏதனால், अत्र-இங்கு, विश्वस्मिन् स्थूलदेहे-எல்லா ஸ்தூல சரீரத்திலும், स्वाभिमानेन-தான் என்ற அபிமானத்துடன், तिष्ठति-இருக்கிறானே, ततः-அதனால், अयं-இவன், विश्व इति-விச்வன் என்ற, नाम्ना-பெயரோடு, सार्थो भवति-பொருள் உள்ளவனாக ஆகிறான்.

எல்லா ஸ்தூல சரீரங்களிலும் (தனித்தனியாக தான் என்ற அபிமானத்துடன் இருப்பதால் இவனுக்கு விசுவன் என்ற பெயர் பொருள் உள்ளதாக ஆகிறது. விசுவம் என்ற சொல்லுக்கு எல்லாம் என்று அர்த்தம். (442)

व्यष्टिरेवास्य विश्वस्य भवति स्थूलविग्रहः ।
उच्यतेऽन्नविकारित्वात् कोशोऽन्नमय इत्ययम् ॥ ४४३ ॥

வ்யஷ்டிரேஷாZஸ்ய விச்வஸ்ய பவதி ஸ்தூல விக்ரஹ: ।
உச்யதேZந்நவிகாரித்வாத் கோசோZந்நமய இத்யயம் ॥

अस्य विश्वस्य-இந்த விசுவனுடைய, व्यष्टिरेव-வ்யஷ்டி சரீரம்தான், स्थूलविग्रहः-ஸ்தூல சரீரமாக भवति-ஆகிறது. अयं-இது, अन्नविकारित्वात्-அன்னத்தின் பரிணாமமானதால், अन्नमयः कोशः इति-அன்னமய கோசம் என்று, उच्यते-சொல்லப்படுகிறது.

இந்த விசுவனுடைய வியஷ்டிதான் ஸ்தூல சரீரம். அது அன்னத்தின் விகார (மாறுபாடு) மாவதால் இது அன்னமய கோசம் எனப்படுகிறது. (443)

देहोऽयं पितृभुक्तान्नविकाराच्छुक्लशोणितात् ।
जातः प्रवर्धतेऽन्नेन तदभावे विनश्यति ॥ ४४४ ॥

तस्मात् अन्नविकारित्वेनायं अन्नमयः मतः ।
आच्छादकत्वादेतस्याप्यसेः कोशवत् आत्मनः ॥ ४४५ ॥

தேஹோऽயம் பித்ருபுக்தாந்ந விகாராத் சுக்லசோணிதாத் ।
ஜாத: ப்ரவர்த்ததேऽந்நேந ததபாவே விநச்யதி ॥
தஸ்மாதந்நவிகாரித்வேநாய மந்நமயோ மத: ।
ஆச்சாதகத்வாதேதஸ்யாப்யஸே: கோசவதாத்மந: ॥

अयं देहः-இந்த சரீரம், पितृभुक्तान्नविकारात्-தாய்தந்தையர்கள் சாப்பிட்ட அன்னத்தின் பரிணாமமான, शुक्लशोणितात्-ரேதஸ்ஸிலிருந்தும் சோணிதத்திலிருந்தும், जातः-உண்டாகி अन्नेन-அன்னத்தால், प्रवर्तते-வளர்கிறது, तदभावे-அந்த அன்னம் இல்லாவிட்டால், विनश्यति-அழிந்துவிடுகிறது. तस्मात्-ஆகையால், अयं-இந்த ஸ்தூல சரீரம், अन्नविकारित्वेन அன்னத்தின் பரிணாமமுள்ளதாகையால், अन्नमयः मतः-அன்னமயமாக கருதப்பட்டிருக்கிறது. एतस्यापि-இந்த ஸ்தூல சரீரத்திற்கும், असेः कोशवत्-கத்திக்கு உறைபோல், आत्मनः आच्छादकत्वात्-ஆத்மாவை மறைக்கும் தன்மை இருப்பதால் (கோசம் எனப்படுகிறது).

இந்த சரீரம் பெற்றோர்கள் சாப்பிட்ட அன்னத்தின் விகாரமான ரேதஸிலிருந்தும் ரத்தத்திலிருந்தும் உண்டானது, அன்னத்தினால் வளர்கிறது, அன்னம் இல்லையானால் நசித்து விடுகிறது. ஆகையால் அன்னத்தின் விகாரமாயிருக்கும் தன்மையினால் இது அன்னமயம் என்று கருதப்படுகிறது. வாளை கோசம் (உறை) மறைப்பதுபோல் இந்த ஸ்தூல சரீரமும் ஆத்மாவை மறைப்பதால் இதற்கும் கோசம் என்று பெயர். ஆகவே இது அன்னமய கோசம். (444-445)

आत्मनः स्थूलभोगानां एतद् आयतनं विदुः ।
शब्दादिविषयान् भुङ्क्ते स्थूलान् स्थूलात्मनि स्थितः ।
बहिः आत्मा ततः स्थूलभोगायतनमुच्यते ॥ ४४६ ॥

ஆத்மந: ஸ்தூலபோகாநாமேததாயதநம் விது: ।
சப்தாதிவிஷயான் புங்க்தே ஸ்தூலான்
ஸ்தூலாத்மநி ஸ்தித: ।
பஹிராத்மா தத: ஸ்தூல போகாயதநமுச்யதே ॥

आत्मनः – ஆத்மாவிற்கு, स्थूलभोगानां–ஸ்தூலமான விஷயங்களையனுபவிப்பதற்கு, आयतनं–இருப்பிடமாக, एतत्– இந்த ஸ்தூலசரீரத்தை, विदुः–கருதுகிறார்கள். आत्मा– ஆத்மா, स्थूलात्मनि–ஸ்தூல சரீரத்தில், स्थितः–இருந்து கொண்டு, बहिः–வெளியிலுள்ள, स्थूलान्–ஸ்தூலமான, शब्दादिविषयान्–சப்தம் முதலான விஷயங்களை, भुंक्ते– அனுபவிக்கிறான். ततः–ஆகையால், स्थूलभोगायतनं– ஸ்தூலமான விஷயங்களின் அநுபவத்திற்கு இருப்பிடமாக उच्यते–சொல்லப்படுகிறது.

ஸ்தூலமான விஷயங்களை அனுபவிக்க ஆத்மாவிற்கு இருப்பிடமாக இந்த அன்னமய கோசத்தை கருதுகிறார்கள். இந்த ஸ்தூலமான சரீரத்தில் இருந்துகொண்டு, ஆத்மா வெளியிலுள்ள ஸ்தூலமான சப்தம் முதலிய விஷயங்களை அனுபவிக்கிறான், ஆகையால் இது ஸ்தூலமான விஷய போகங்களுக்கு இருப்பிடம் என்று சொல்லப்படுகிறது. (446)

इन्द्रियैरुपनीतानां शब्दादीनामयं स्वयम् ।
देहेन्द्रियमनोयुक्तो भोक्तेत्याहुर्मनीषिणः ॥ ४४७ ॥

இந்த்ரியைருபநீதாநாம் சப்தாதீநாமயம் ஸ்வயம் ।
தேஹேந்த்ரியமனோயுக்தோ போக்தேத்யாஹுர்
மநீஷிண: ॥

देहेन्द्रियमनोयुक्तः–தேஹம், இந்திரியம், மனம் இவைகளுடன்கூடிய, अयं–இந்த ஆத்மா, स्वयं–தான், इन्द्रियैः– இந்திரியங்களால், उपनीतानां–கொண்டுவரப்பட்ட, शब्दादीनां–சப்தம் முதலான விஷயங்களை, भोक्ता–அனுபவிக்கிறவன் इति–என்று, मनीषिणः–அறிவுள்ளவர்கள், आहुः– சொல்கிறார்கள்.

இந்த ஆத்மாதான் தேஹம், இந்திரியங்கள், மனஸ், இவைகளுடன் சேர்ந்துகொண்டு இந்திரியங்களால் கொண்டு வரப்படும் சப்தம் முதலிய விஷயங்களை அனுபவிக்கிறவன் என்று அறிந்தவர்கள் சொல்கிறார்கள். (447)

एकादशद्वारवतीह देहे सौधे महाराज इवाक्षवर्गैः ।
संसेव्यमानो विषयोपभोगान् उपाधिसंस्थः कुरुतेऽयमात्मा ॥

ஏகாதசத்வாரவதீஹ தேஹே
ஸௌதே மஹாராஜ இவாக்ஷவர்கை: ।
ஸம்ஸேவ்யமானோ விஷயோபபோகான்
உபாதிஸம்ஸ்த: குருதேऽயமாத்மா ॥

अयं आत्मा—இந்த ஆத்மா, एकादशद्वारवति – பதினொரு த்வாரங்களுடன் கூடிய, इह देहे இந்த சரீரத்தில், सौधे- மாளிகையில், महाराज इव—மஹாராஜர்போல, अक्षवर्गैः- இந்திரியக் கூட்டங்களால், संसेव्यमानः-ஸேவிக்கப்படுகிறவனாய், उपाधिसंस्थः—உபாதியான மனதில் இருந்து கொண்டு, विषयोपभोगान्—விஷயானுபவங்களை, कुरुते- செய்கிறது.

இந்த ஆத்மா பதினொரு வாசல்களுள்ள (இரண்டு கண்கள், இரண்டு காதுகள், இரண்டு மூக்குத் துவாரங்கள், வாய், உபஸ்தம், குதம், தொப்புள், தலையில் பிரஹ்மரந்திரம் ஆக 11) இந்த சரீரத்தில், பெரிய மாளிகையில் மகாராஜனைப் போல, இந்திரியங்களின் கூட்டங்களால் ஸேவிக்கப்பட்டுக் கொண்டு, உபாதியான அந்தக்கரணத்தில் இருந்துகொண்டு விஷயங்களை அனுபவிக்கிறது. (448)

ज्ञानेन्द्रियाणि निजदैवतचोदितानि
कर्मेन्द्रियाण्यपि तथा मनआदिकानि ।
स्वस्वप्रयोजनविधौ नियतानि सन्ति
यत्नेन किंकरजना इव तं भजन्ते ॥ ४४९ ॥

ஞானேந்த்ரியாணி நிஜதைவதசோதிதானி
கர்மேந்த்ரியாண்யபி ததா மந ஆதிகானி ।
ஸ்வஸ்வப்ரயோஜனவிதௌ நியதானி ஸந்தி
யத்னேந கிங்கரஜநா இவ தம் பஜந்தே ॥

**ज्ञानेन्द्रियाणि**-ஞானேந்திரியங்களும், **कर्मेन्द्रियाणि**-கர்மேந்திரியங்களும், **तथा**-அவ்விதமே, **मन आदिकानि अपि**-மனம் முதலானவைகளும், **निजदैवतचोदितानि**-தன் தன் தேவதைகளால் தூண்டப்பட்டவைகளாய், **स्वस्वप्रयोजनविधौ**-தன் தன் பிரயோஜனம் ஏற்படுவதில், **नियतानि सन्ति**-கட்டுப்பாடு உள்ளவைகளாக இருந்துகொண்டு, **किंकरजना इव**-வேலைக்காரமனிதர்கள்போல, **यत्नेन**-முயற்சியோடு, **तं**-அந்த ஆத்மாவை, **भजन्ते**-பணிபுரிகின்றன.

காது முதலான ஞானேந்திரியங்கள், வாக் முதலான கர்மேந்திரியங்கள், அப்படியே மனஸ் முதலானதுகள் தன் தன் அதிஷ்டான தேவதைகளால் ஏவப்பட்டு தன் தன் பிரயோஜன கார்யத்தில் கட்டுப்பட்டவைகளாக இருந்துகொண்டு யத்தினத்துடன், வேலையாள்களைப்போல, அந்த ஆத்மாவை ஸேவிக்கின்றன. (ஒவ்வொரு பணியாளுக்கும் ஒவ்வொரு வேலை தனித்தனியாக ஏற்பட்டிருப்பதுபோல ஒவ்வொரு இந்திரியத்தாலும் தனித்தனியான பிரயோஜனம் ஏற்படுகிறது. கண்ணால் ஏற்படும் பிரயோஜனம் பார்வை. இது மற்றவைகளால் ஏற்படாது. இதுபோலவே ஒவ்வொன்றும்.) (449)

यत्रोपभुङ्क्ते विषयान् स्थूलानेव महामतिः ।
अहं ममेति सैषाऽस्यावस्था जाग्रदितीर्यते ॥ ४५० ॥

யத்ரோபபுங்க்தே விஷயான் ஸ்தூலானேவ மஹாமதி: ।
அஹம் மமேதி ஸைஷாऽஸ்யாவஸ்த்தா ஜாக்ரதிதீர்யதே ॥

**यत्र**-எந்த நிலையில், **महामतिः**-பெரிய மனம் உள்ள ஆத்மா, **अहं मम इति**-நான் என்னுடையது என்று, **स्थूलान् विषयानेव**-ஸ்தூலமான விஷயங்களையே, **उपभुंक्ते**-அனுபவிக்

கிருனே, सा एषा-அந்த இந்த, अस्य-இவனுடைய, अवस्था-அவஸ்தை, जाग्रत् इति-ஜாகரம் என்று, ईर्यते-சொல்லப் படுகிறது.

எப்பொழுது விசாலமான புத்தியுடன் ஸ்தூலமான விஷயங்களையே "நான், என்னுடையது" என்று அனுபவிக்கிருனே, அப்பொழுதுள்ள இந்த நிலை ஜாக்கிரத் (விழிப்பு) என்று சொல்லப்படுகிறது. (450)

एतत्समष्टिव्यष्टयोश्चोभयोरप्यभिमानिनोः ।
तद्विश्ववैश्वानरयोः अभेदः पूर्ववन्मतः ॥ ४५१ ॥

ஏதத்ஸமஷ்டிவ்யஷ்ட்யோச்சோபயோரப்யபிமானிநோ: ।
தத்விச்வவைச்வாநரயோரபேத: பூர்வவன் மத: ॥

एतत्समष्टिव्यष्टयोः च - இந்த ஸமஷ்டி வியஷ்டிஸ்தூல சரீரங்களுக்கும், उभयोः-இரண்டினுடையவும், अभिमानिनोः-அபிமானிகளான, तद्विश्ववैश्वानरयोरपि-அந்த விசுவனுக்கும் வைச்வாநரனுக்கும், पूर्ववत् - முன்போல, अभेदः - அபேதமானது, मतः - ஒப்புக்கொள்ளப்படுகிறது.

இந்த ஸமஷ்டி வியஷ்டி ஸ்தூல சரீரங்களுக்கும், அவைகளை அபிமானிக்கும் அந்த விசுவன் வைசுவாநரன் இருவர்களுக்கும், முன் காரண ஸூக்ஷ்ம சரீரங்களுக்கு சொன்னது போலவே பேதம் (வேற்றுமை) கிடையாது. (451)

स्थूलसूक्ष्मकारणाख्याः प्रपञ्चा ये निरूपिताः ।
ते सर्वेऽपि मिलित्वैकः प्रपञ्चोऽपि महान् भवेत् ॥ ४५२ ॥

ஸ்தூலஸூக்ஷ்மகாரணாக்யா: ப்ரபஞ்சா யே நிரூபிதா: ।
தே ஸர்வேऽபி மிலித்வைக: ப்ரபஞ்சோऽபி மஹான் பவேத்

स्थूलसूक्ष्मकारणाख्याः-ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற பெயர்கள் கொண்ட, ये प्रपञ्चाः-எந்த பிரபஞ்சங்கள், निरूपिताः-நிரூபணம் செய்யப்பட்டனவோ, ते सर्वेऽपि-அவை எல்லாம், मिलित्वा-சேர்ந்து, एकः-ஒரு, महान्-பெரிய, प्रपञ्चोऽपि-பிரபஞ்சமாகவும், भवेत्-ஆகும்,

இதுவரை நிருபிக்கப்பட்ட ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற பெயர்களையுடைய ஜகத்துக்கள் எல்லாம் சேர்ந்து ஒரு பெரிய பிரபஞ்சம் ஆகும். (452)

(அ) இவ்விதமாக மூன்றுவித ஸ்ருஷ்டியையும் வர்ணித்து விட்டு, இவ்வளவிலும் எவ்வித ஸம்பந்தமுமன்னியில் தனித்து நிற்பது எதுவோ, அதுவே சுத்த சைதன்யம் என்றும் இவைகளெல்லாம் அந்த சுத்த சைதன்யத்தின் பேரில் பிராந்தியினல் ஏற்றப்பட்டவையென்றும் மேலால் சொல்கிருர் :—

महाप्रपञ्चावच्छिन्नं विश्वप्राज्ञादिलक्षणम् ।
विराडादीशपर्यन्तं चैतन्यं चैकमेव तत् ॥ ४५३ ॥

மஹாப்ரபஞ்சாவச்சிந்நம் விச்வப்ராஜ்ஞாதிலக்ஷணம் ।
விராடாதீசபர்யந்தம் சைதன்யம் சைகமேவ தத் ॥

महाप्रपञ्चावच्छिन्नं - மஹா பிரபஞ்சத்துடன்கூடியதும், विश्वप्राज्ञादिलक्षणं - விச்வன், ப்ராஜ்ஞன் முதலான ஸ்வரூப முள்ளதும், विराडादीशपर्यन्तं - விராட் முதல் ஈசன் வரை யுள்ளதுமான, तत् - அந்த, चैतन्यं च - சைதன்யமும், एकमेव - ஒன்றுதான்.

முன் சுலோகத்தில் ஸ்தூலம் ஸூக்ஷ்மம், காரணம் என்ற மூன்றும் சேர்ந்து ஒரே பிரபஞ்சம் என்று சொல்லப்பட்டது. அதுபோலவே இந்த மஹா பிரபஞ்சத்துடன்கூடி வியஷ்டியில் விசுவன் தைஜஸன், ப்ராஜ்ஞன் என்றும், ஸமஷ்டியில் விராட், ஹிரண்யகர்ப்பர், ஈசுவரன் என்றும் பலவாருகத் தொன்றும் சைதன்யமும் வாஸ்தவத்தில் ஒன்றுதான். வெவ்வேறு அல்ல.

यदनाद्यन्तं अव्यक्तं चैतन्यं अजं अक्षरम् ।
महाप्रपञ्चेन सहाविविक्तं सत् अयोग्निवत् ॥ ४५४ ॥
तत् सर्वं खल्विदं ब्रह्मेत्यस्य वाक्यस्य पण्डितैः ।
वाच्यार्थं इति निर्णीतं विविक्तं लक्ष्य इत्यपि ॥ ४५५ ॥

யதநாத்யந்தமவ்யக்தம் சைதன்யமஜமக்ஷரம் ।
மஹாப்ரபஞ்சேன ஸஹாவிவிக்தம் ஸதயோऽக்நிவத் ॥

தத்ஸர்வம் கல்விதம் ப்ரஹ்மேத்யஸ்ய வாக்யஸ்ய
பண்டிதை: ।
வாச்யார்த்த இதி நிர்ணீதம் விவிக்தம் லக்ஷ்ய இத்யபி ॥

यत्-எந்த, चैतन्यं-சைதன்யம், अनाद्यन्तं-ஆரம்பமும் முடிவும் அற்றதாய், अव्यक्तं-அப்ரத்யக்ஷமாய், अजं-பிறப்பில்லாததாய், अक्षरं-அழிவற்றதாய், अयोऽग्निवत्-இரும்புடன் நெருப்புபோல், महाप्रपञ्चेन सह:-மஹாப்ரபஞ்சத்துடன் கூட, अविविक्तं सत्-பிரிக்கமுடியாமல் சேர்ந்துள்ளதோ, तत्-அந்த சைதன்யம், सर्वं खलु इदं ब्रह्म-எல்லாம் இந்த ப்ரஹ்மம், इति अस्य वाक्यस्य-என்ற இந்த வாக்யத்திற்கு, वाच्यार्थ इति-நேரில் சொல்லப்படும் பொருள் என்றும், विविक्तं-சேராமல் தனித்துள்ள சைதன்யம், लक्ष्यः इत्यपि-குறிப்பாக உணர்த்தப்படும் பொருள் என்றும், पण्डितैः-கற்றுணர்ந்தவர்களால், निर्णीतं-தீர்மானிக்கப்பட்டுள்ளது,

எந்த சைதன்யம் ஆரம்பமன்னியில் முடிவன்னியில் வியக்தமாக புலப்படாமல் (புலன்களால் அறியமுடியாததாய்) பிறப்பன்னியில் நாசமன்னியில் இருந்துகொண்டு, பெரிய பிரபஞ்சத்திலிருந்து பிரிக்கப்படாமல், இரும்பில் அக்னியைப் போல, அதனுடன் சேர்ந்து இருக்கிறதோ அது, "இது எல்லாம் பிரஹ்மமே" என்று சொல்லும் வேத வாக்யத்தின் நேராக சொல்லப்படும் அர்த்தம் என்றும், அப்பிரபஞ்சத்திலிருந்து பிரித்துத் தனிப்பட்ட சுத்தமான சைதன்யம் குறிக்கப்படும் அர்த்தம் என்றும் பண்டிதர்களால் நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. [முன் 329வது சுலோகத்தையும் கவனிக்கவும்] (454—455)

स्थूलाद्यज्ञानपर्यन्तं कार्यकारणलक्षणम् ।
दृश्यं सर्वं अनात्मेति विजानीहि विचक्षण ॥ ४५६ ॥

ஸ்தூலாத்யக்ஞானபர்யந்தம் கார்யகாரணலக்ஷணம் ।
த்ருச்யம் ஸர்வமநாத்மேதி விஜாநீஹி விசக்ஷண ॥

विचक्षण - புத்திசாலியே, स्थूलाद्यज्ञानपर्यन्तं - ஸ்துலம் முதல் அக்ஞானம் முடிய, कार्यकारणलक्षणं - கார்யமாகவும்

காரணமாகவும் இருக்கும், दृश्यं-அறியக்கூடிய, सर्वं-எல்லா வஸ்துவும், अनात्मा-ஆத்மாவல்ல, इति-என்று विजानीहि-அறிந்துகொள்.

ஹே புத்திசாலியே, கார்யமாகவும் காரணமாகவும் இருக்கும், ஸ்தூலம் முதல் அக்ஞானம் முடிய உள்ள அறியக் கூடிய பொருள் எல்லாம் அனாத்மா, ஆத்மா அல்ல என்று நன்கு அறிந்துகொள். (456)

अन्तःकरणतद्वृत्तिद्रष्टृ नित्यं अविक्रियम् ।
चैतन्यं यत् तत् आत्मेति बुद्ध्या बुध्यस्व सूक्ष्मया ॥

அந்தக்கரண தத்வ்ருத்தி த்ருஷ்ட்ரு நித்யமவிக்ரியம் ।
சைதன்யம் யத் ததாத்மேதி புத்த்யா புத்யஸ்வ
ஸௌக்ஷ்மயா ॥

यत् - எது, अन्तःकरणतद्वृत्तिद्रष्टृ-மனதையும் அதன் வியாபாரங்களையும் அறிகிறதாயும, नित्यं-அழிவற்றதாயும், अविक्रियं-மாறுதலற்றதாயும உள்ளதோ, तत् चैतन्यं-அந்த சைதன்யம், आत्मा इति-ஆத்மா என்று, सूक्ष्मया बुद्ध्या-ஸௌக்ஷ்மமான புத்தியால், बुध्यस्व-அறிந்துகொள்.

எந்த சைதன்யம் அந்த:கரணத்தையும் அதன் வியாபாரங்களையும் ஸாக்ஷியாகவிருந்துகொண்டு அதனுடன் ஸம்பந்தப் படாமல் பார்த்து வருகிறதோ, நித்யமாயும் எவ்வித மாறுதலன்னியிலும் இருக்கும் அந்த சைதன்யம் ஆத்மா வென்று ஸௌக்ஷ்மமான புத்தியினால் அறிந்துகொள். (457)

एष प्रत्यक् स्वप्रकाशो निरंशोऽसङ्गः शुद्धः सर्वदैकस्वभावः ।
नित्याखण्डानन्दरूपो निरीहः साक्षी चेता केवलो निर्गुणश्च ॥

ஏஷ ப்ரத்யக்ஸ்வப்ரகாசோ நிரம்சோ
ऽஸங்க: சுத்த: ஸர்வதைக ஸ்வபாவ: ।
நித்யாகண்டாநந்தரூபோ நிரீஹ:
ஸாக்ஷீ சேதா கேவலோ நிர்குணச்ச ॥

एषः-இந்த, प्रत्यक्-உள்ளே விளங்கும் ஆத்மா, स्वप्रकाशः-தானே பிரகாசிக்கிறவர், निरंशः-அவயவமற்றவர், असंगः-ஸம்பந்தமற்றவர், शुद्धः-தோஷமற்றவர், सदा-எப்பொழுதும், एकस्वभावः-ஒரே தன்மை உள்ளவர், नित्याखण्डानन्दरूपः-அழிவற்ற பிரிவில்லாத ஆனந்தஸ்வரூபர், निरीहः-விருப்பமோ, சேஷ்டையோ இல்லாதவர், साक्षी-பற்றில்லாமல் பார்ப்பவர், चेताः-அறிகிறவர், केवलः-தனித்திருப்பவர், निर्गुणश्च-குணமற்றவர்.

எல்லாவற்றிற்கும் உள்ளே விளங்கும் இந்த ஆத்மா ஸ்வயம் பிரகாசமானவர், மற்றதாலன்றிதானே பிரகாசிப்பவர் அவயவம் அற்றவர், ஒட்டாதவர் பற்று அற்றவர், சுத்தர் தோஷமற்றவர் எப்பொழுதும் மாருத ஒரே ஸ்வபாவ முள்ளவர், நித்யமாயும் பரிபூர்ணமாயும் ஆனந்தமாயு மிருப்பவர், எவ்வித ஆசை (சேஷ்டை)யில்லாதவர், எல்லாவற்றையும் ஸாக்ஷியாகமத்திரம் பார்த்துக்கொண்டிருப்பவர், அறிகிறவர், தனித்திருப்பவர் குணமற்றவர். (458)

नैव प्रत्यक् जायते वर्धते नो किंचिन्नापक्षीयते नैति नाशम् ।
आत्मा नित्यः शाश्वतोऽयं पुराणः नासौ हन्यो हन्यमाने शरीरे ॥

நைவ ப்ரத்யக் ஜாயதே வர்த்ததே நோ
கிஞ்சித் நாபக்ஷீயதே நைதி நாசம் ।
ஆத்மா நித்ய: சாச்வதோऽயம் புராணோ
நாஸௌ ஹந்யோ ஹந்யமானே சரீரே ॥

प्रत्यक्-ப்ரத்யகாத்மா, नैव जायते-பிறக்கிறதேயில்லை, नो वर्धते-வளர்கிறதுமில்லை, किंचित् नापक्षीयते-சிறிதும் குறைவு அடைவதில்லை, नाशं नैति-அழிவு அடைவதில்லை, अयं-இந்த, आत्मा-ஆத்மா, नित्यः-நித்யர், शाश्वतः-எப்பொழுதும் இருப்பவர், पुराणः-பழமையானவர், असौ-அவர், शरीरे-சரீரம், हन्यमाने-கொல்லப்படும்பொழுது, न हन्यः-கொல்லப்படாதவர்.

எல்லாவற்றிற்கும் உள்ளே இருக்கும் ஆத்மா பிறப்பதே கிடையாது. வளர்வதும் கிடையாது. கொஞ்சமேனும் குறைவதும் கிடையாது. அவருக்கு நாசம் கிடையவே

கிடையாது. அவர் நித்யர். எப்பொழுதும் ஒரேமாதிரி இருப்பவர். வெகு பழயவர். எப்பொழுதும் புதிதானவர். சரீரம் அடிபட்டாலும் (கொல்லப்பட்டாலும்) இவர் அடிபடக் கூடியவர் (கொல்லப்படக்கூடியவர்) அல்ல. (459)

जन्मास्तित्वविवृद्धयः परिणतिश्चापक्षतिर्नाशनम्
दृश्यस्यैव भवन्ति षड्विकृतयो नानाविधा व्याधयः ।
स्थूलत्वादि च नीलताद्यपि मितिर्वर्णाश्रमादिप्रथा
दृश्यन्ते वपुषो न चात्मन इमे तद्विक्रियासाक्षिणः ॥

*ஜன்மாஸ்தித்வ விவ்ருத்தய: பரிணதிச்சாபக்ஷதிர்*
*நாசனம்*
*த்ருச்யஸ்யைவ பவந்தி ஷட்விக்ருதயோ நாநாவிதா*
*வ்யாதய: ।*
*ஸ்தூலத்வாதி ச நீலதாத்யபி மிதிர் வர்ணாச்ரமாதி ப்ரதா*
*த்ருச்யந்தே வபுஷோ ந சாத்மந இமே*
*தத்விக்ரியா ஸாக்ஷிண: ॥*

जन्मास्तित्वविवृद्धयः-பிறப்பு, இருப்பு, வளர்ச்சி இவையும், परिणतिश्च-மாறுதலும், अपक्षतिः-குறைவும், नाशनं-அழிவும், षड् विकृतयः-இந்த ஆறு விகாரங்களும், दृश्यस्यैव-அறியப் படும் பொருளுக்குத்தான், भवन्ति-உண்டாகின்றன, नाना-विधाः-பல விதமான, व्याधयः-வியாதிகளும், स्थूलत्वादि-பருமன் முதலியவையும், नीलताद्यपि-நீல நிறம் முதலியவையும், मितिः-அளவும், वर्णाश्रमादिप्रथा-வர்ணம், ஆசிரமம் முதலிய பிரஸித்தியும், वपुषः-சரீரத்திற்கு, दृश्यन्ते-காணப்படுகின்றன, इमे-இவை, तद्विक्रियासाक्षिणः-அந்த விகாரங்களை நேரில் அறிகின்ற, आत्मनः-ஆத்மாவுக்கு, न च-இல்லை.

பிறப்பு, இருப்பு, வளர்ச்சி, மாறுதல் குறைதல், நாசம் என்கிற ஆறுவித மாறுதல்களும் அறியப்படும் பதார்த்தத்திற்குத்தான் உண்டு. பல விதமான வியாதிகள், பருமன் முதலிய பரிமாணம் நீலம் முதலான நிறம், அளவு, ஜாதி ஆசிரமம் முதலான வியவஹாரம் எல்லாம் சரீரத்திற்குத்தான்

காணப்படுகின்றன. அந்த மாறுதல்களை யெல்லாம் ஸாக்ஷியாகப் பார்த்துக்கொண்டிருக்கிற ஆத்மாவிற்கு இவை கிடையாது. (460)

अस्मिन्नात्मन्यनात्मत्वं अनात्मन्यात्मतां पुनः ।
विपरीततयाऽध्यस्य संसरन्ति विमोहतः ॥ ४६१ ॥

அஸ்மிந்நாத்மந்யநாத்மத்வம் அநாத்மந்யாத்மதாம் புந: ।
விபரீததயாத்யஸ்ய ஸம்ஸரந்தி விமோஹத: ॥

अस्मिन् आत्मनि-இந்த ஆத்மாவில், अनात्मत्वं-அநாத்மாவாக இருக்கும் தன்மையையும், अनात्मनि-அநாத்மாவில், आत्मतां पुनः-ஆத்மாவாக இருக்கும் தன்மையையும், विपरीततः-விபரீதமாக, विमोहतः-மோஹத்தால், अध्यस्य-ஆரோபித்து, संसरन्ति-ஸம்ஸாரத்தில் உழலுகிறார்கள்.

முன் சுலோகத்தில் சொல்லியபடி ஆத்மாவில் ஒருவித தர்மமும் இல்லாமலிருந்தும் அக்ஞான மயக்கத்தால் உள்ளது உள்ளபடி தெரிந்து கொள்ளாமல் விபரீதமாக ஆத்மாவை அநாத்மாவாகவும், அநாத்மாவை ஆத்மாவாகவும் எண்ணுவதுடன் அநாத்ம தர்மங்களை ஆத்மாவிலும் ஆத்ம தர்மங்களை அநாத்மாவிலும் இருப்பதாக நினைத்துக்கொண்டு அதனால் வீணாக ஸம்ஸார ஸாகரத்தில் உழலுகிறார்கள். (461)

भ्रान्त्या मनुष्योऽहं अहं द्विजोऽहं
तज्ज्ञोऽहं अज्ञोऽहं अतीव पापी ।
भ्रष्टोऽस्मि शिष्टोऽस्मि सुखी च दुःखी-
त्येवं विमुह्यात्मनि कल्पयन्ति ॥ ४६२ ॥

ப்ராந்த்யா மநுஷ்யோஹமஹம் த்விஜோஹம்
தத்ஜ்ஞோஹமஜ்ஞோஹமதீவ பாபீ ।
ப்ரஷ்டோऽஸ்மி சிஷ்டோऽஸ்மி ஸுகீ ச துக்கீ-
த்யேவம் விமுஹ்யாத்மநி கல்பயந்தி ॥

भ्रान्त्या-விபரீத ஞானத்தால், विमुह्य-மயக்கமடைந்து, अहं-நான், मनुष्यः-மனிதன். अहं द्विजः-நான் த்விஜன்.

अहं-நான், तज्ज्ञः-அதை அறிந்தவன். अहं-நான், अज्ञः-அறியாதவன். अहं-நான், अतीव पापी-மிகவும் பாபி, भ्रष्टोऽस्मि-ப்ரஷ்டனாக இருக்கிறேன் शिष्टोऽस्मि-சிஷ்டனாக இருக்கிறேன். सुखी च-ஸுகியாகவுமிருக்கிறேன். दुःखी-துக்கமுள்ளவன், इत्येवं-என்று இம்மாதிரியாக, आत्मनि-ஆத்மாவில், कल्पयन्ति-ஆரோபம் செய்கிறார்கள்.

ஆத்மாவை அநாத்மாவாகவும் அநாத்மாவை ஆத்மாவாகவும் காண்பது ப்ராந்தி, விபரீத ஞானம். இது மோஹத்தினுல் உண்மையை அறியாததால் ஏற்படுகிறது. விபரீத ஞானத்தால் ஆத்மாவை மனுஷ்யனுகவும், பிராமணனுகவும் அறிந்தவனுகவும், அறியாதவனுகவும் பாபியாகவும் ஸதாசார ஸம்பன்னனுகவும், ஆசார மில்லாதவனுகவும் ஸுகியாகவும் துக்கியாகவும் இன்னும் பற்பல விதமாகக் காண்கிருர்கள். இவைகள் ஆத்மாவில் இல்லாவிட்டாலும் அறியாமையால் அதில் சுமத்துகிருர்கள். (462)

अनात्मनो जन्मजरामृतिक्षुधातृष्णासुखक्लेशभयादिधर्मान् ।
विपर्ययेण ह्यतथाविधेऽस्मिन्नारोपयन्त्यात्मनि बुद्धिदोषात् ॥ ४६३ ॥

*அநாத்மனோ ஜந்ம ஜராம்ருதிக்ஷுதா-*
*த்ருஷ்ணா ஸுகக்லேசபயாதிதர்மான் ।*
*விபர்யயேண ஹ்யததாவிதேऽஸ்மின்*
*ஆரோபயந்த்யாத்மனி புத்திதோஷாத் ॥*

अनात्मनः-அநாத்மாவினுடைய, जन्म जरामृति क्षुधा तृष्णा सुख क्लेशभयादि धर्मान्-பிறப்பு, மூப்பு, மரணம், பசி, தாகம், ஸுகம், துன்பம், பயம் முதலான தர்மங்களை, अतथाविधे-அப்படியில்லாத, अस्मिन् आत्मनि இந்த ஆத்மாவில். बुद्धिदोषात्-அந்தக்கரண தோஷத்தால், विपर्ययेण-மாறுதலாக आरोपयन्ति-ஏற்றுகிருர்கள்.

பிறப்பு, ஜரை, மரணம், பசி, தாஹம், ஸுகம், துக்கம், பயம் முதலான தர்மங்கள் அனுத்மாக்களைச் சேர்ந்தவை. ஆத்மாவில் இவை கிடையுவே கிடையாது இப்படி

இருந்தும் புத்தி தோஷத்தால் விபரீதமாக இவைகள் ஆத்மாவிலிருப்பதாக எண்ணுகிறார்கள். (463)

भ्रान्त्या यत्र यदध्यासः तत्कृतेन गुणेन वा ।
दोषेणाप्यणुमात्रेण स न संबध्यते क्वचित् ॥ ४६४ ॥

किं मरुः मृगतृष्णाम्बुपूरेणार्द्रत्वमृच्छति ।
दृष्टिसंस्थितपीतेन शङ्खः पीतायते किमु ॥ ४६५ ॥

बालकल्पितनैल्येन व्योम किं मलिनायते ।

*ப்ராந்த்யா யத்ர யதத்யாஸ: தத்க்ருதேன குணேன வா ।*
*தோஷேணாப்யணுமாத்ரேண ஸ ந ஸம்பத்யதே க்வசித் ॥*

*கிம் மரூர் ம்ருகத்ருஷ்ணாம்பு பூரேணார்த்ரத்வம் ருச்சதி ।*
*த்ருஷ்டிஸம்ஸ்த்திதபீதேந சங்க: பீதாயதே கிமு ॥*

*பாலகல்பிதநைல்யேன வ்யோம கிம் மலிநாயதே ।*

**यत्र**-எங்கு, **भ्रान्त्या**-ப்ராந்தியால், **यदध्यासः**-எதன் அத்யாஸம் ஏற்படுகிறதோ, **तत्कृतेन**-அதனால் ஏற்பட்ட, **गुणेन**-குணத்தோடும், **वा**-அல்லது **दोषेणापि**-தோஷத்துடனும், **अणुमात्रेण**-கொஞ்சம்கூட, **सः**-அது, **क्वचित्**-ஒரு இடத்திலும், **न संबध्यते**-சேருவதில்லை.

**मरुः**-பாலைவனபூமி, **मृगतृष्णाम्बुपूरेण**-கானல் நீர் ப்ரவாஹத்தால், **आर्द्रत्वं**-ஈரமாக இருக்கும் தன்மையை, **किं ऋच्छति** அடைகிறதா? **दृष्टिसंस्थित पीतेन**-கண்ணில் இருக்கும் மஞ்சள் நிறத்தால், **शङ्खः**-சங்கம், **किमु पीतायते** மஞ்சள் நிறமுள்ளதாகிவிடுகிறதா? **बालकल्पितनैल्येन**-சிறுவனால் ப்ராந்தியால் கல்பிக்கப்பட்ட நீல நிறத்தால், **व्योम**-ஆகாசம், **किं मलिनायते** - அழுக்கடைந்ததாக ஆகுமா?

பிராந்தியினால் எதனிடத்தில் எது வைக்கப்படுகிறதோ அதனால் ஏற்படும் குணத்தினாலாவது தோஷத்தினாலாவது அது கொஞ்சம் கூட எப்பொழுதும் ஸம்பந்தப்படுவது




கிடையாது. ப்ராந்தியால் ஒரு வஸ்துவை வேறொரு வஸ்துவாகப் பார்த்த போதிலும் அந்த வேறொரு வஸ்துவில் உள்ள குணமோ தோஷமோ ஒன்றும் அதிஷ்டான வஸ்துவில் ஒட்டுவதில்லை.

பாலைவன பூமியில் ஸூர்யகிரணத்தால் கானல் நீர் ப்ரவாஹமாக ஓடுவதைக் காண்கிறான் நீர் இல்லாத விடத்தில் நீரைக் காண்பது பிராந்தி இவன் கண்ணுக்கு நீர் தோன்றினாலும், அந்த நீரால் அந்த பூமி நனையுமா? காமாலை வியாதி உள்ளவன் கண் பித்தத்தால் மஞ்சள் நிறமாக இருக்கும். அவன் கண்ணுக்கு வெளுப்பான சங்கமும் மஞ்சளாகத் தெரியும். ஆனாலும் உண்மையில் சங்கம் மஞ்சள் நிறமாக ஆகிவிடுமா? சிறுவன் பிராந்தியால் ஆகாசத்தில் நீல நிறம் இருப்பதாக எண்ணினாலும் ஆகாசம் நீலமாக ஆகிவிடுமா? ஆகவே பிராந்தியால் ஆரோபிதமான கானல் நீர் பாலைவன பூமியில் கொஞ்சம்கூட ஒட்டுவதில்லை. ஆரோபிதமான மஞ்சள் நிறம் சங்கத்தில் ஒட்டுவதில்லை. ஆகாசத்திலும் நீல நிறம் ஒட்டுவதில்லை. இதுபோலவே பிராந்தியால் ஆத்மாவை அநாத்மாவாகவும், அநாத்மாவை ஆத்மாவாகவும் பார்த்த போதிலும் ஆத்மதர்மங்கள் அநாத்மாவிலும், அநாத்ம தர்மங்கள் ஆத்மாவிலும் ஒருக்காலும் வராது. (464-465)

(அ) இவ்வாறு குரு சொல்லிக்கொண்டு வருகையில் ஒரு பதார்த்தத்தை பிராந்தியால் வேறு பதார்த்தமாகப் பார்ப்பதானால் அதற்கு சில அம்சங்கள் தேவைப்படுகின்றனவே அவையெல்லாம் ஆத்மாநாத்மப்ரமத்தில் இருக்கின்றனவா என்ற விஷயத்தில் சிஷ்யனுக்கு ஸந்தேகம் ஏற்படுகிறது. கிளிஞ்சலை வெள்ளி யென்று நினைக்கும் போது கிளிஞ்சலென்று தெரியாமல் போனாலும் "இது" என்று முன்னால் ஏதோ தெரிகிறது. அது மாதிரி ஆத்மா நம் முன்னால் 'இது' என்றாவது தெரிகிறதா? வெள்ளியென்று இங்கே நினைப்பது தவறாயிருந்தாலும் இதற்கு முன் வேறு எங்கேயாவது வாஸ்தவமான வெள்ளியைப் பார்த்திருந்தால்தானே இவ்விடத்தில் வெள்ளி என்ற பிராந்தி ஏற்படும்? வேறு எங்கேயாவது ஜகத் ஸத்யமாக இருந்து அனுபவிக்கப் பட்டிருக்கிறதா? தவிரவும், கிளிஞ்சலுக்கும் வெள்ளிக்கும் பளபளப்பு என்னும் ஸாதிருச்யம் இருப்பதினால் தானே பிராந்தி ஏற்படுகிறது? அந்த ஸாதிருச்யஞானம் ஏற்படு

வதற்கு இரண்டு பதார்த்தங்களையும் முன்னால் பார்த்திருக்க வேண்டாமா? ஆத்மாவைப் பார்த்ததே கிடையாதே. அப்படியிருக்க ஆத்மாவிற்கும் அனாத்மாவிற்கும் ஸாதிருச்ய ஞானம் எப்படி ஏற்படமுடியும்? அந்த ஞானமில்லாமல் பிராந்தி எப்படி ஏற்படும் மேலும் அநாத்மாவில் ஆத்மாத்யாஸம் எப்படி ஏற்படுகிறது? அதை எப்படி போக்கடிக்கிறது? அக்ஞானம் என்பது ஸமஷ்டி உபாதியாய் ஈசுவரனிடத்திலும் வியஷ்டி உபாதியாய் ஜீவனிடத்திலும் இருக்கும்போது ஜீவனுக்கு மாத்திரம் ஸம்ஸார பந்தம், ஈசுவரனுக்கு அது கிடையாது என்பது எப்படிப்பொருந்தும்? என்றெல்லாம் ஸந்தேஹ மேற்படுவதால் அவைகளை நிவிருத்தி செய்து கொடுக்கும்படி சிஷ்யன் வினயத்துடன் குருவை பிரார்த்தித்துக் கேட்கிறான். :—

शिष्यः —

प्रत्यगात्मन्यविषये अनात्माध्यासः कथं प्रभो ॥ ४६६ ॥

*சிஷ்யன் —*

*ப்ரத்யகாத்மந்யவிஷயேऽநாத்மாத்யாஸ: கதம் ப்ரபோ ॥*

**प्रभो**-ஹே ப்ரபுவே **अविषये**-அறிவுக்கு கோசரமாக இல்லாத, **प्रत्यगात्मनि**-ஆத்மாவில், **अनात्माध्यासः**-அநாத்மாத்யாஸம். **कथं**-எப்படி ?

பிரத்யக் ஆத்மா அறிவுக்கு விஷயமாகாது அது பற்றி கொஞ்சமும் அறிந்து கொள்ள முடியாது. அறியப்படாத இந்த ஆத்மாவில் அனாத்மாவின் அத்யாஸம் எப்படி ?

पुरो दृष्टे हि विषयेऽध्यस्यन्ति विषयान्तरम् ।
तत् दृष्टे शुक्तिरज्ज्वादौ सादृश्याद्यनुबन्धतः ॥ ४६७ ॥

*புரோ த்ருஷ்டே ஹி விஷயேऽத்யஸ்யந்தி விஷயாந்தரம் ।*
*தத் த்ருஷ்டே சுக்திரஜ்ஜ்வாதௌ ஸாத்ருச்யாத்யனுபந்தத: ॥*

**पुरः**-தனக்கு முன்னால், **दृष्टे** பார்க்கப்பட்ட, **विषये हि**-விஷயத்திலல்லவா, **विषयान्तरं**-வேறொரு விஷயத்தை,

अध्यस्यन्ति-ஆரோபம் செய்கிறார்கள். दृष्टे-பார்க்கப்பட்ட, शुक्तिरज्ज्वादौ-கிளிஞ்சல், கயிறு முதலியவற்றில் सादृश्याद्यनुबन्धतः-ஸாத்ருச்யம் முதலிய ஸம்பந்தத்தால், तत्-அந்த அத்யாஸம் ஏற்படுகிறது.

தன் முன்னால் இருக்கும் வஸ்து கண்ணுக்குப் புலப்படாவிட்டால் அதில் வேறொரு வஸ்துவின் ஆரோபம் ஏற்படுவதில்லை. இது கிளிஞ்சல், இது கயிறு என்று விசேஷமாகத் தெரியாவிட்டாலும் ஸாமான்யமாக ஏதோ ஒரு வஸ்து இருப்பது தெரியவேணும். அப்படித் தெரிந்த வஸ்துவில் தான் ஆரோபம் ஏற்படுகிறது. ஆத்மாவோ ஒரு விதத்திலும் யாருக்கும் தெரிவதில்லை. மேலும் பளபளப்பு முதலான வெள்ளியின் ஸாத்ருச்யம் கிளிஞ்சலிலும் நீளம் வளைவு முதலான பாம்பின் ஸாத்ருச்யம் கயிற்றிலும் தோன்றுவதால் தான் அத்யாஸம் ஏற்படுகிறது. அநாத்மாவின் ஸாத்ருச்யம் சிறிதும் ஆத்மாவில் இல்லாததால் எப்படி ஆத்மாவில் அநாத்மாத்யாஸம் ஏற்படும்? (467)

परत्र पूर्वदृष्टस्यावभासः स्मृतिलक्षणः ।
अध्यासः स कथं स्वामिन् भवेत् आत्मन्यगोचरे ॥ ४६८ ॥

*பரத்ர பூர்வத்ருஷ்டஸ்யாவபாஸ: ஸ்ம்ருதி லக்ஷண: ।*
*அத்யாஸ: ஸ கத்தம் ஸ்வாமின் பவேதாத்மந்யகோசரே ॥*

पूर्वदृष्टस्य-முன்னால் பார்க்கப்பட்ட வஸ்துவிற்கு, परत्र-வேறொன்றில், स्मृतिलक्षण:-நினைவுபோன்றதான, अवभासः-தோற்றம், अध्यास:-அத்யாஸமாகும். सः-அந்த அத்யாஸம் स्वामिन्-ஸ்வாமியே! अगोचरे-அறிவிற்கு விஷயமாகாத, आत्मनि-ஆத்மாவில், कथं भवेत्-எப்படி ஏற்படும்?

தன் எதிரில் காணப்படும் வஸ்துவானது இதற்கு முன் தன்னால் பார்க்கப்பட்டதும் இப்பொழுது அருகிலில்லாததுமான வேறொரு வஸ்துவாகத் தோன்றுவது தான் அத்யாஸம் என்பது கிளிஞ்சல் தன்முன்னால் கிளிஞ்சலாகத் தோன்றாவிட்டாலும் ஸாமான்யமாக இது என்று தெரியவருகிறது. இதற்கு முன்னால் கடைகளில் பார்க்கப்பட்டு இப்பொழுது அருகிலில்லாத வெள்ளியாக தன் முன்னால் தோன்றும்

வஸ்துவைக் காண்கிறான். வெள்ளி அருகில் இல்லாததாலும் நேரில் பார்க்காததாலும் இது நினைவு போன்றது என்று சொன்னார். அருகிலில்லாத விஷயத்தை நினைப்பது தான் ஸ்ம்ருதியாகும். இங்கு அருகிலில்லாத வஸ்து மற்றொன்றில் தோன்றுவதால் இதை ஸ்மிருதி என்று கூறமுடியாது. இதனால் தான் விஷயம் ஸந்நிஹிதமில்லை யென்பதை மட்டும் கொண்டு ஸ்மிருதி போன்றது என்று சொன்னார். முன் ஒரு இடத்தில் கண்ட பொருளையே இப்பொழுது வேறு இடத்தில் காண்பது ப்ரத்யபிஜ்ஞையாகும். அங்கு எதிரில் இருக்கும் விஷயத்தையே காண்கிறான். இங்கு அருகிலில்லாத வஸ்துவைக் காண்பதால் இது ப்ரத்யபிஜ்ஞையுமல்ல ஆகவே இது மித்யா ஞானம் தோற்றம் என்று சொன்னதாலேயே இது பொய் என்று ஏற்படுகிறது இது தான் அத்யாஸ லக்ஷணம் இப்பேற்பட்ட அத்யாஸம் ஒரு பொழுதும் அறியப்படாத ஆத்மாவில் எப்படி ஏற்படும்? (468)

नानुभूतः कदाऽप्यात्माऽननुभूतस्य वस्तुनः ।
सादृश्यं सिध्यति कथं अनात्मनि विलक्षणे ॥ ४६९ ॥

நாநுபூத: கதாப்யாத்மாऽநநுபூதஸ்ய வஸ்துன: ।
ஸாத்ருச்யம் ஸித்யதி கதம் அநாத்மநி விலக்ஷணே ॥

आत्मा-ஆத்மாவானது, कदापि-ஒருபொழுதும், न अनुभूतः-அனுபவிக்கப்பட்டதல்ல. अननुभूतस्य-அனுபவிக்கப்படாத वस्तुनः-ஆத்ம வஸ்துவின், सादृश्यं-ஸாத்ருச்யம், विलक्षणे-விலக்ஷணமான, अनात्मनि-அநாத்மாவில், कथं-எப்படி, सिध्यति-ஸித்திக்கும்?

ஆத்மா ஒருபொழுதும் யாராலும் அனுபவிக்கப்பட்டதல்ல. அனுபவிக்கப்படாத ஆத்ம வஸ்துவிற்கு ஸாதிருச்யம் எப்படி? தவிறவும் ஆத்மாவைக் காட்டிலும் நேர்விருத்தமான லக்ஷணத்துடன் கூடிய அனாத்மாவில் ஆத்மாவின் ஸாதிருச்யம் எப்படியிருக்கமுடியும்? (469)

अनात्मन्यात्मताध्यासः कथमेष समागतः ।
निवृत्तिः कथ एतस्य केनोपायेन सिध्यति ॥ ४७० ॥

அநாத்மந்யாத்மதாத்யாஸ: கதமேஷ ஸமாகத: I
நிவ்ருத்தி: கதமேதஸ்ய கேநோபாயேந ஸித்யதி II

अनात्मनि- அநாத்மாவில், एष आत्मताध्यासः- இந்த ஆத்மாத்யாஸம், कथं-எப்படி, समागतः-வந்தது? एतस्य-இந்த அத்யாஸத்தின், निवृत्तिः-நீக்கம், कथं-எப்படி केन उपायेन- எந்த உபாயத்தால், सिध्यति-ஸித்திக்கும் ?

அனாத்மாவில் ஆத்மதன்மை விஷயமான இந்த அத்யாஸம் எப்படி வந்தது? எந்த உபாயத்தினால் எப்படி இந்த அத்யாஸத்திற்கு நிவிருத்தியேற்படும்? (470)

उपाधियोग उभयोः सम एवेशजीवयोः ।
जीवस्यैव कथं बन्धो नेश्वरस्यास्ति तत् कथम् ॥ ४७१ ॥

உபாதியோக உபயோ: ஸம ஏவேச ஜீவயோ: I
ஜீவஸ்யைவ கதம் பந்தோ நேச்வரஸ்யாஸ்தி தத் கதம் II

ईशजीवयोः उभयोः-ஈசுவரன், ஜீவன் இருவர்களுக்கும், उपाधियोगे-உபாதியின் ஸம்பந்தம. समे एव-ஸமமாகவே இருக்கும்போது, जीवस्यैव-ஜீவனுக்கு மட்டும், बन्धः-பந்தம், कथं-எப்படி? ईश्वरस्य ஈசுவரனுக்கு, तत् कथं नास्ति-அது ஏன் இல்லை?

உபாதி ஸம்பந்தத்தால் தான் ஜீவசைதன்யத்துக்கு பந்தம் ஏற்பட்டிருப்பதாக கூறப்பட்டது. உபாதி ஸம்பந்தம் ஜீவனைப்போல் ஈசுவரனுக்கும் இருக்கிறது. ஜீவனுக்கு சிறிய உபாதி ஈசுவரனுக்குப் பெரிய உபாதி பந்தத்துக்குக் காரணமான உபாதி ஸம்பந்தம் ஜீவன் ஈசுவரன் இருவர்களுக்கும் ஸமமாயிருக்கும்பொழுது ஜீவனுக்கு மட்டும் தான் பந்தம் ஈசுவரனுக்கு பந்தமில்லை என்பது எப்படிப் பொருந்தும்? 471

एतत् सर्वं दयादृष्ट्या करामलकवत् स्फुटम् ।
प्रतिपादय सर्वज्ञ श्रीगुरो करुणानिधे ॥ ४७२ ॥

ஏதத் ஸர்வம் தயாத்ருஷ்ட்யா கராமலகவத் ஸ்புடம் ।
ப்ரதிபாதய ஸர்வத்ர ஸ்ரீகுரோ கருணாநிதே ॥

करुणानिधे-கருணையின் இருப்பிடமான, श्रीगुरो-ஸ்ரீகுருவே, दयादृष्ट्या-கருணாகடாக்ஷத்துடன், एतत्सर्वं-இது எல்லாவற்றையும், करामलकवत्-உள்ளங்கை நெல்லிக் கனிபோல், स्फुटं-தெளிவாக, सर्वत्र-எல்லா அம்சத்திலும் प्रतिपादय-விளக்கவேண்டும்.

ஹே குரோ, கருணாநிதே, இந்த ஸம்சயமெல்லாவற்றிற்கும் எல்லா அம்சங்களிலும், கையிலுள்ள நெல்லிக்கனி போலத் தெளிவாய், கிருபாகடாக்ஷத்துடன், விபரமாய் எடுத்துச் சொல்லுங்கள். (472)

(அ) இவ்விதம் பிரார்த்திக்கப்பட்டதும் குருவானவர் முதலில் 14 சுலோகங்களால் அத்யாஸத்தின் தன்மையையும் அதிலடங்கிய அம்சங்களையும் சொல்கிறார் :—

न तावत् अयं एकान्तेनात्माऽविषय इष्यते ।
अस्यात्मत्प्रत्ययार्थत्वात् अपरोक्षाच्च सर्वशः ॥ ४७३ ॥

ந தாவதயமேகாந்தேநாத்மாऽவிஷய இஷ்யதே ।
அஸ்யாஸ்மத் ப்ரத்யயார்த்தத்வாத் அபரோக்ஷாச்ச ஸர்வச: ॥

अस्य-இந்த ஆத்மா, अस्मत्प्रत्ययार्थत्वात्-'நான்' என்ற அறிவுக்கு விஷயமாயிருப்பதாலும், सर्वशः-எல்லா விதத்திலும், अपरोक्षाच्च-நேரில் தெரிவதாயிருப்பதாலும், अयं आत्मा तावत्-இந்த ஆத்மா, एकान्तेन-ஒரேடியாக, अविषयः-அறியமுடியாததாக, न इष्यते-கருதப்படுகிறதில்லை.

இந்த ஆத்மாவை ப்ரத்யக்ஷமாக நேரில் யாவரும் அறிந்து கொள்கின்றனர். "நான்" என்ற சொல்லும் அறிவும் ஆத்மாவைத்தான் குறிக்கிறது. ஆகவே ஒரேயடியாக ஆத்மா அறியப்படாதது என்று கூறமுடியாது. (473)

प्रसिद्धिः आत्मनोऽस्त्येव न कस्यापि न दृश्यते ।
प्रत्ययो नाहमस्मीति न ह्यस्ति प्रत्यगात्मनि ॥ ४७४ ॥

ப்ரஸித்திராத்மனோஸ்த்யேவ ந கஸ்யாபி ந த்ருச்யதே ।
ப்ரத்யயோ நாஹமஸ்மீதி ந ஹ்யஸ்தி ப்ரத்யகாத்மநி ॥

**आत्मनः**-ஆத்மாவுக்கு, **प्रसिद्धिः**-பிரஸித்தி, **अस्त्येव**-கட்டாயம் இருக்கிறது; **कस्यापि**-ஒருவருக்கும், **न न दृश्यते**-அறியப்படாததாக இல்லை. **प्रत्यगात्मनि**- ப்ரத்யகாத்ம விஷயமாக, **नाहमस्मि**-நான் இல்லை. **इति**-என்ற, **प्रत्ययः**-எண்ணம், **न ह्यस्ति**-இல்லையல்லவா!

ஆத்மா இருக்கிறார் என்ற பிரஸித்தி இருக்கவேயிருக்கிறது. யாருக்கும் ஆத்மா அறியப்படாமலில்லை. "நான் இல்லை" என்கிற எண்ணம் பிரத்யகாத்ம விஷயத்தில் யாருக்கும் கிடையாதல்லவா! (474)

न कस्यापि स्वसद्भावे प्रमाणं अभिकाङ्क्ष्यते ।
प्रमाणानां च प्रामाण्यं यन्मूलं किंनु बोधयेत् ॥ ४७५ ॥

ந கஸ்யாபி ஸ்வஸத்பாவே ப்ரமாணமபிகாங்க்ஷ்யதே ।
ப்ரமாணாநாம் ச ப்ராமாண்யம் யன்மூலம்
கிம் நு போதயேத் ॥

**कस्यापि**-ஒருவனுக்கும், **स्वसद्भावे**-தான் இருக்கும் விஷயத்தில், **प्रमाणं**-பிரமாணம், **न अभिकाङ्क्ष्यते**-கோரப் படுவதில்லை. **प्रमाणानां**-பிரமாணங்களுக்கு, **प्रामाण्यं**-பிரமாணத் தன்மை, **यन्मूलं**-எதன் காரணமாக ஏற்படு கிறதோ (அதை) **किं नु**-எதுதான், **बोधयेत्**-அறிவுறுத்தும்?

எவனுக்கும் தன்னுடைய இருப்பு விஷயத்தில் பிரமாணம் வேண்டப்படுவதில்லை. பிரமாணங்களுக்கெல்லாம் எதன் மூலமாக பிராமாண்யம் ஏற்படுகிறதோ, அதை எது தெரியப் படுத்தும்? (475)

(அ) "நான்" என்ற உணர்ச்சியிருப்பதினுல் அப்படி ஒரு பதார்த்தம் உண்டா என்ற ஸந்தேகத்திற்கு இடமில்லாம லிருக்கலாம். ஆனுலும் அந்த பதார்த்தத்தின் வாஸ்தவ ஸ்வருபம் என்னவென்று தெரியவில்லையே என்று கேட்டால், அதற்கு ஸமாதானம் சொல்லுகிருர் :—

मायाकार्यैः तिरोभूतो नैष आत्माऽनुभूयते ।
मेघवृन्दैः यथा भानुः तथाऽयं अहमादिभिः ॥ ४७६ ॥

மாயாகார்யைஸ் திரோபூதோ நைஷ ஆத்மாநுபூயதே ।
மேகப்ருந்தைர் யதா பாநுஸ் ததாயமஹமாதிபி: ॥

मायाकार्यैः-மாயையின் காரியங்களால், तिरोभूत-மறைக்கப்பட்டு, एष आत्मा-இந்த ஆத்மா, नानुभूयते-அனுபவிக்கப்படுகிறதில்லை. मेघवृन्दैः-மேகக்கூட்டங்களினுல், भानुः-ஸூரியன், यथा-எப்படியோ, तथा-அப்படி, अयं-இந்த ஆத்மா, अहमादिभिः-அஹங்காரம் முதலியவைகளால் (மறைக்கப்பட்டுள்ளது)

மேகக் கூட்டங்களினுல் மறைக்கப்பட்டு சூரியன் நன்ருக்த் தெரிவதில்லை. அதேபோல மாயையின் காரியங் களான அஹங்காரம் முதலியவைகளால் மறைக்கப்பட்டு இந்த ஆத்மா அனுபவிக்கப்படுகிறதில்லை. (476)

पुरःस्थ एव विषये वस्तुन्यध्यस्यतां इति ।
नियमः न कृतः सद्भिः भ्रान्तिरेवात्र कारणम् ॥ ४७७ ॥

புரஸ்ஸ்த ஏவ விஷயே வஸ்துந்யத்யஸ்யதாமிதி ।
நியமோ ந க்ருத: ஸத்பிர் ப்ராந்திரேவாத்ர காரணம் ॥

पुरःस्थे-முன்னுலுள்ள विषये वस्तुनि एव-அறிவிற்கு விஷயமான வஸ்துவில்தான், अध्यस्यतां-ஆரோபம் ஏற்படும் इति-என்று, नियमः-கட்டுப்பாடு. सद्भिः-அறிந்த பெரியோர் களால், न कृतः-செய்யப்படவில்லை. अत्र இவ்விஷயத்தில், भ्रान्तिरेव-ப்ரமம்தான். कारणम्-காரணமாகும்.

முன்னால் இருக்கும் விஷயமான வஸ்துவில்தான் அத்யாஸம் ஏற்படலாம் என்று ஸாதுக்களால் நியமம் செய்யப் படவில்லை. இவ் விஷயத்தில் பிராந்தியே காரணமாக இருக்கப் போதுமானது. (477)

दृगाद्यविषये व्योम्नि नीलतादि यथाऽबुधाः ।
अध्यस्यन्ति तथैवास्मिन् आत्मन्यपि मतिभ्रमात् ॥ ४७८ ॥

*த்ருகாத்யவிஷயே வ்யோம்னி நீலதாதி யதாऽபுதா: ।*
*அத்யஸ்யந்தி ததைவாஸ்மின் ஆத்மந்யபி மதிப்ரமாத் ॥*

**दृगाद्यविषये**-கண் முதலியவைகளுக்கு கோசரமாகாத, **व्योम्नि**-ஆகாசத்தில், **यथा**-எப்படி, **अबुधाः**-அறிவில்லாதவர், **नीलतादि**-நீலமாயிருக்கும் தன்மை முதலியவற்றை, **अध्यस्यन्ति**-ஆரோபம் செய்கிறார்களோ, **तथैव**-அப்படியே, **अस्मिन् आत्मन्यपि**-இந்த ஆத்மாவிலும், **मतिभ्रमात्**-புத்தி பிரமத்தால் (ஆரோபம் செய்கிறார்கள்)

கண் முதலானவைகளால் அறியமுடியாத ஆகாசத்தில் எப்படி அறிவில்லாதவர்கள் நீலமாயிருக்கும் தன்மை முதலியதை அத்யாஸம் செய்கிறார்களோ, அப்படியேதான் விஷயமாகத்தெரியாத இந்த ஆத்மாவிடத்தில் புத்திபிரமத்தினால் அத்யாஸம் ஏற்படுகிறது. (478)

अनात्मन्यात्मताध्यासे न सादृश्यं अपेक्ष्यते ।
पीतोऽयं शङ्ख इत्यादौ सादृश्यं किं अपेक्षितम् ॥ ४७९ ॥

*அநாத்மந்யாத்மதாத்யாஸே ந ஸாத்ருச்யமபேக்ஷ்யதே ।*
*பீதோயம் சங்க இத்யாதெள ஸாத்ருச்யம் கிமபேக்ஷிதம் ॥*

**अनात्मनि**-அநாத்மாவில், **आत्मताध्यासे** - ஆத்மத் தன்மையின் அத்யாஸம் ஏற்படுவதில், **सादृश्यं**-ஸாத்ருச்யமானது, **न अपेक्ष्यते**-தேவைப்படுவதில்லை. **अयं**-இந்த, **शंखः**-சங்கு, **पीतः**-மஞ்சள் நிறமானது, **इत्यादौ**-இதுமுதலான இடத்தில், **सादृश्यं**-ஸாத்ருச்யம், **किमपेक्षितम्**-தேவைப்பட்டு இருக்கிறதா ?

அநாத்மாவிடத்தில் ஆத்மத் தன்மையை அத்யாஸம் செய்வதில் ஸாதிருச்யம் தேவையில்லை "இந்த சங்கு மஞ்சளாயிருக்கிறது" இது முதலான இடங்களில் ஸாதிருச்யம் வேண்டப்படுகிறதா? இல்லையே. (479)

निरुपाधिभ्रमेष्वस्य नैवापेक्षा प्रदृश्यते ।
सोपाधिष्वेव तद्दृष्टं रज्जुसर्पभ्रमादिषु ॥ ४८० ॥

*நிருபாதிப்ரமேஷ்வஸ்ய நைவாபேக்ஷா ப்ரத்ருச்யதே ।*
*ஸோபாதிஷ்வேவ தத் த்ருஷ்டம் ரஜ்ஜுஸர்ப்ப*
*ப்ரமாதிஷு ॥*

निरुपाधिभ्रमेषु-உபாதியில்லாமல் ஏற்படும் பிரமங்களில், अस्य-இந்த ஸாத்ருச்யத்தின், अपेक्षा-தேவை, नैव प्रदृश्यते-காணப்படவேயில்லை. रज्जुसर्पभ्रमादिषु-கயிற்றில் தோன்றும் பாம்பு முதலான, सोपाधिषु एव-உபாதியுடன்கூடிய பிரமங்களில்தான், तत्-அந்த ஸாத்ருச்யம், दृष्टम्-காணப்பட்டு உள்ளது.

உபாதியில்லாமலே பிரமம் ஏற்படும் ஸ்தலங்களில் ஸாதிருச்யத்தின் அபேக்ஷயே காணப்படுவதில்லை. கயிற்றில் ஸர்ப்ப பிரமம் முதலான, உபாதியுள்ள பிரமஸ்தலங்களில் தான் ஸாதிருச்யம் காணப்படுகிறது. (480)

तथापि किंचित् वक्ष्यामि सादृश्यं शृणु तत्परः ।

*ததாபி கிஞ்சித் வக்ஷ்யாமி ஸாத்ருச்யம் ச்ருணு தத்பர: ।*

तथापि - அப்படியிருந்தபோதிலும், सादृश्यं-ஸாத்ருச்யத்தை, किंचित्-கொஞ்சம், वक्ष्यामि-சொல்கிறேன். तत्परः-அதிலேயே ஈடுபட்டவனாக, शृणु-கேள்.

அத்யாஸத்திற்கு ஸாத்ருச்யம் கட்டாயம் வேண்டும் என்று நீ நினைப்பாயேயாகில் உன் அபிப்ராயப்படியே ஆத்மாத்யாஸத்திலும் ஸாத்ருச்யம் உள்ளது என்பதை கொஞ்சம் எடுத்துக் கூறுகிறேன் அதிலேயே கவனமாய் கேள்.

अत्यन्तनिर्मलः सूक्ष्मः आत्माऽयं अतिभास्वरः ॥ ४८१ ॥

बुद्धिः तथैव सत्त्वात्मा साभासा भास्वराऽमला ।

*அத்யந்தநிர்மல: ஸூக்ஷ்ம ஆத்மாயமதிபாஸ்வர: ॥*

*புத்திஸ் ததைவ ஸத்வாத்மா ஸாபாஸா பாஸ்வராமலா ।*

अयं आत्मा- இந்த ஆத்மா, अत्यन्तनिर्मलः.மிகவும் சுத்தமாக உள்ளது, सूक्ष्मः- ஸூக்ஷ்மமானது, अतिभास्वरः—மிகவும் பிரகாசமாக உள்ளது तथैव-அப்படியே, सत्त्वात्मा—ஸத்வ குணத்தை ஸ்வரூபமாகக் கொண்டதும், साभासा—ஆத்ம பிரதிபிம்பத்துடன் கூடியதுமான, बुद्धिः—புத்தியும், भास्वरा—பிரகாசமுள்ளதாயும், अमला—சுத்தமாயும் உள்ளது.

இந்த ஆத்மா வெகு நிர்மலமாயிருப்பவர், ஸூக்ஷ்மமாயிருப்பவர், வெகு பிரகாசமுள்ளவர். அப்படியே ஸத்வ ஸ்வபாவமுள்ளதும், ஆத்மாவின் பிரதிபிம்பத்தோடுகூடியதுமான புத்தியும் பிரகாசமுள்ளது, நிர்மலமானது.

सांनिध्यात् आत्मवत् भाति सूर्यवत् स्फटिको यथा ॥ ४८२ ॥

*ஸாந்நித்யாதாத்மவத் பாதி ஸூர்யவத் ஸ்படிகோ யதா ॥*

यथा-எப்படி, स्फटिकः—ஸ்படிகம், सूर्यवत्-ஸூரியன்போல் भाति—பிரகாசிக்கிறதோ அப்படியே (புத்தியும்) सांनिध्यात्—அருகில் இருப்பதால், आत्मवत्- ஆத்மாபோல், भाति—விளங்குகிறது.

எப்படி ஸ்படிகம் ஸூரியனுடைய ஸந்நிதியில் ஸூர்யன் போல பிரகாசிக்கிறதோ, அப்படியே புத்தியும் ஆத்மாவின் ஸந்நிதியில் இருப்பதால் ஆத்மாவைப்போல பிரகாசிக்கிறது.

आत्माभासा ततो बुद्धिः बुद्ध्याभासं ततो मनः ।
अक्षाणि मन आभासानि अक्षाभासं इदं वपुः ॥ ४८३ ॥

*ஆத்மாபாஸா ததோ புத்திர் புத்த்யாபாஸம் ததோ மந: ।*
*அக்ஷாணி மந ஆபாஸாந்யக்ஷாபாஸமிதம் வபு: ॥*

ततः-ஆகையால், बुद्धिः-புத்தியானது, आत्माभासा-ஆத்மாவினால் பிரகாசிக்கிறது. ततः-பிறகு, मनः-மனது, बुद्ध्याभासं-புத்தியின் பிரகாசமுள்ளது. अक्षाणि-இந்திரியங்கள், मन आभासानि-மனதால் பிரகாசிப்பவை. इदं वपुः-இந்த சரீரம், अक्षाभासं-இந்திரியங்களால் பிரகாசிப்பவை.

ஸ்படிகத்திற்கு இயற்கையாக ஒளியில்லாவிட்டாலும் ஸூர்யனிடமிருந்து ஒளியைப் பெற்று ஒளியுள்ளதுபோல் தோன்றுகிறது. இதுபோல் புத்தி ஆத்மாவின் பிரகாசத்தைப் பெற்று தானும் பிரகாசிக்கிறது. இந்த ஆத்ம பிரகாசம் முதலில் புத்தியிலும் புத்தியின் மூலம் மனஸிலும் மனதின் மூலம் இந்திரியங்களிலும் இந்திரியங்கள் மூலம் சரீரத்திலும் வந்து எல்லாம் பிரகாசிக்கின்றன ஆபாஸமென்கிற பதத்திற்கு பிரதிபிம்பம் என்ற பொருள் உள்ளபோதிலும் அவ்வார்த்தைக்கு "கொஞ்சம் பிரகாசம்" அதாவது "கடன்வாங்கி கொஞ்சமாய் பிரகாசிக்கும் தன்மையுள்ளது" என்பதே நேரான அர்த்தம். (483)

अत एव आत्मताबुद्धिः देहाक्षादौ अनात्मनि ।
मूढानां प्रतिबिम्बादौ बालानामिव दृश्यते ।
सादृश्यं विद्यते बुद्धौ आत्मनोऽध्यासकारणम् ॥ ४८४ ॥

அத ஏவாத்மதாபுத்திர் தேஹாக்ஷாதாவனாத்மனி ।
மூடானாம் ப்ரதிபிம்பாதௌ பாலாநாமிவ த்ருச்யதே ।
ஸாத்ருச்யம் வித்யதே புத்தாவாத்மனோத்யாஸகாரணம்

अत एव-ஆகையால்தான். बालानां-சிறுவர்களுக்கு, प्रतिबिम्बादौ इव-பிரதிபிம்பம் முதலியவற்றில்போல, मूढानां-அவிவேகிகளுக்கு, अनात्मनि-ஆத்மாவல்லாத, देहाक्षादौ-தேஹம், இந்திரியம் முதலியவற்றில், आत्मताबुद्धिः-ஆத்மா என்ற புத்தி, दृश्यते-காணப்படுகிறது. (ஆகவே) अध्यासकारणं-அத்யாஸத்திற்குக் காரணமான, आत्मनः-ஆத்மாவின் सादृश्यं-ஸாத்ருச்யம், बुद्धौ-புத்தியில், विद्यते-இருக்கிறது.

ஆகையினால்தான் (ஆத்மாவின் பிரகாசத்தைப் பெற்று தேஹம் முதலியவைகளும் பிரகாசமுள்ளவைகளாகத்தோன்று கிறபடியால்தான்) பாலர்களுக்கு பிரதிபிம்பம் முதலியதில் தான் என்ற புத்தி ஏற்படுவதுபோல மோஹத்தையடைந்த அவிவேகிகளுக்கு அநாத்மாவான தேகம் இந்திரியம் முதலானதில் ஆத்மா என்கிற புத்தி காணப்படுகிறது.

இவ்விதமாக அத்யாஸம் செய்வதற்குவேண்டிய காரண மான ஆத்ம ஸாதிருச்யம் புத்தியில் இருக்கிறது. (484)

अनात्मन्यहमित्येव योऽयं अध्यास ईरितः ।
स्यात् उत्तरोत्तराध्यासे पूर्वपूर्वस्तु कारणम् ॥ ४८५ ॥

*அநாத்மந்யஹமித்யேவ யோயமத்யாஸ ஈரித: ।*
*ஸ்யாதுத்தரோத்தராத்யாஸே பூர்வபூர்வஸ்து காரணம் ॥*

**अनात्मनि**-ஆத்மாவல்லாததில், **अहमित्येव**-நான் என்பதாகவே, **योयं अध्यासः**-எந்த இந்த அத்யாஸம், **ईरितः**-சொல்லப்பட்டதோ (இதில்) **उत्तरोत्तराध्यासे**-பின்பின் வரும் அத்யாஸத்தில், **पूर्वपूर्वस्तु**-முன் முன் ஏற்பட்ட அத்யாஸம், **कारणं स्यात्**-காரணம் ஆகும்.

அனாத்மாவினிடத்தில் நான் என்று இப்பொழுது அத்யாஸம் ஏற்படுவதற்கு இதேமாதிரி இதற்கு முன் ஏற்பட்ட அத்யாஸம் காரணம் அந்த அத்யாஸத்திற்கு அதற்கு முன் ஏற்பட்ட அத்யாஸம் காரணம் இவ்வாறு அநாதிகாலமாக பின் பின் ஏற்படும் அத்யாஸத்திற்கு முன் முன் உள்ள அத்யாஸமே காரணமாகும். (485)

सुप्तिमूर्छोत्थितेष्वेव दृष्टः संसारलक्षणः ।
अनादिरेषाऽविद्या तत्संस्कारोऽपि च तादृशः ॥ ४८६ ॥

*ஸுப்தி மூர்ச்சோத்திதேஷ்வேவ த்ருஷ்ட:*
*ஸம்ஸாரலக்ஷண: ।*
*அநாதிரேஷாऽவித்யா தத்ஸம்ஸ்காரோபி ச தாத்ருச: ॥*

सुप्तिमूर्छोत्थितेषु एव-தூக்கம் மூர்ச்சை இவற்றிலிருந்து வெளிவந்தவர்களிடம்தான், संसारलक्षण:-ஸம்ஸாரரூபமான அத்யாஸம். दृष्ट:-காணப்பட்டிருக்கிறது. एषा-இந்த, अविद्या-அவித்யை, अनादि:-ஆதியற்றது. तत्संस्कारोपि च-அந்த அவித்யையின் ஸம்ஸ்காரமும், तादृश:-அவ்விதமே (ஆதியற்றதே)

நல்ல தூக்கத்திலிருந்தும் மூர்ச்சையிலிருந்தும் எழுந்திருந்தவர்களிடத்தில் தான் ஸம்ஸார ரூபமான அத்யாஸம் காணப்படுகின்றது. இந்த அவித்யை ஆதியற்றது. அதன் ஸம்ஸ்காரமும் அப்படியே ஆதியற்றது (486)

(அ) வியஷ்டி அக்ஞானமாகிற அவித்யையிலிருந்து ஸம்ஸாரம் எப்படி ஏற்படுகிறது என்பதை இனி விஸ்தரிக்கிறார்:—

अध्यासबाधागमनस्य कारणं शृणु प्रवक्ष्यामि समाहितात्मा ।
यस्मादिदं प्राप्तं अनर्थजातं जन्माप्ययव्याधिजरादिदुःखम् ॥ ४८७ ॥

அத்யாஸ பாதாகமநஸ்ய காரணம்
ச்ருணு ப்ரவக்ஷ்யாமி ஸமாஹிதாத்மா ।
யஸ்மாதிதம் ப்ராப்தமநர்த்த ஜாதம்
ஜந்மாப்யய வ்யாதி ஜராதி துக்கம் ॥

अध्यासबाधागमनस्य-அத்யாஸமென்னும் துன்பம் வருவதன், कारणं-காரணத்தை, प्रवक्ष्यामि-சொல்கிறேன். समाहितात्मा-மிகுந்த கவனமுள்ள மனதுடன், शृणु கேள். यस्मात्-எதிலிருந்து, जन्माप्यय-பிறவி, மரணம், व्याधि-பிணி, जरादिदुःखं-மூப்பு, மனஸ்தாபம், துன்பம் ஆகிய, इदं-இந்த, अनर्थजातं-அநர்த்த ஸமூஹம், प्राप्तं-வந்துள்ளதோ.

எதிலிருந்து பிறப்பு, இறப்பு, வியாதி, ஜரை, மனஸ்தாபம், துன்பம் முதலிய துக்கமாகிற அனர்த்தக்கூட்டம் வந்திருக்கிறதோ, அந்த அத்யாஸமாகிற தொந்திரவு ஏற்பட்டதின் காரணத்தைச்சொல்கிறேன். கவனமான மனஸுடன் கேள்.

आत्मोपाधेरविद्याया अस्ति शक्तिद्वयं महत् ।
विक्षेप आवृतिश्चेति याभ्यां संसार आत्मनः ॥ ४८८ ॥

*ஆத்மோபாதேரவித்யாயா அஸ்தி சக்தி த்வயம் மஹத் ।*
*விக்ஷேப ஆவ்ருதிச்சேதி யாப்யாம் ஸம்ஸார ஆத்மந: ॥*

**आत्मोपाधेः**-ஆத்மாவின் உபாதியான, **अविद्यायाः**-அவித்யைக்கு, **विक्षेपः**-விக்ஷேபமும், **आवृतिश्च**-ஆவரணமும், **इति**-என்ற, **महत्**-பெரிய, **शक्तिद्वयं**-இரண்டு சக்தி, **अस्ति**-இருக்கிறது. **याभ्यां**-எவைகளால், **आत्मनः**-ஆத்மாவுக்கு, **संसारः**-பிறப்பு இறப்பு ரூபமான ஸம்ஸாரம் ஏற்படுகிறதோ.

ஆத்மாவிற்கு உபாதியாயிருக்கும் அவித்யைக்கு இரண்டு பெரிய சக்திகள் இருக்கின்றன. ஒன்று விக்ஷேபம் மற்றொன்று ஆவரணம். இவைகளினால்தான் ஆத்மாவிற்கு ஸம்ஸாரம் ஏற்படுகிறது. (488)

आवृतिः तमसः शक्तिः तद्धि आवरणकारणम् ।
मूलाविद्येति सा प्रोक्ता यया संमोहितं जगत् ॥ ४८९ ॥

*ஆவ்ருதிஸ் தமஸ: சக்திஸ் தத்யாவரணகாரணம் ।*
*மூலாவித்யேதி ஸா ப்ரோக்தா யயா ஸம்மோஹிதம் ஜகத்॥*

**आवृतिः**-ஆவரணம். **तमसः**-தமோகுணத்தின், **शक्तिः**-சக்தி, **तत्**-அந்த தமோகுணம். **आवरणकारणं हि**-ஆவரணத்திற்குக் காரணமல்லவா, **यया**-எதனால், **जगत्**-பிரபஞ்சம். **संमोहितं**-நன்கு மோஹத்தையடைந்திருக்கிறதோ, **सा**-அது **मूलाविद्या इति**-மூலாவித்யை என்று, **प्रोक्ता**-சொல்லப்பட்டு உள்ளது.

ஆவரணம் என்பது தமோ குணத்தின் சக்தி. அதுதான் (தமோ குணம்தான்) மறைப்பதற்குக் காரணம். எதனால் உலகம் மோஹத்தையடைந்திருக்கிறதோ, அந்த ஆவரண சக்தி மூலாவித்யை-எல்லாவற்றிற்கும் வேர் மாதிரியுள்ள அக்ஞானம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. (489

विवेकवानपि अतियौक्तिकोऽपि श्रुतात्मतत्त्वोऽपि च पण्डितोऽपि ।
शक्त्या यया संवृतबोधदृष्टिः आत्मानं आत्मस्थमिमं न वेद ॥ ४९० ॥

விவேகவானப்யதி யௌக்திகோபி
ச்ருதாத்மதத்வோபி ச பண்டிதோபி ।
சக்த்யா யயா ஸம்வ்ருதபோதத்ருஷ்டி:
ஆத்மாநமாத்மஸ்தமிமம் ந வேத ॥

**विवेकवानपि**-விவேகமுள்ளவனாக இருந்தாலும், **अतियौक्तिकोऽपि**-மிகுந்த யுக்திசாலியாக இருந்தாலும், **श्रुतात्मतत्त्वोपि च**-ஆத்மதத்வத்தைக் கேட்டுத் தெரிந்தவனாயிருந்தாலும், **पण्डितोपि**-படித்தவனாயிருந்தாலும், **यया शक्त्या**-எந்த சக்தியால், **संवृतबोधदृष्टिः**-மறைக்கப்பட்ட ஞானப் பார்வை உடையவனாக, **आत्मस्थं**-தன்னிடமுள்ள, **इमं आत्मानं**-இந்த ஆத்மாவை, **न वेद**-அறியவில்லையோ.

விவேகமுள்ளவனாயிருந்தாலும், யுக்தியில் வெகு ஸாமர்த்தியசாலியாயிருந்தாலும், ஆத்ம தத்வத்தைக்கேட்டு அறிந்தவனாயிருந்தாலும், வித்வானாயிருந்தாலும், இந்த ஆவரண சக்தியினால் மறைக்கப்பட்ட ஞானமாகிற கண்ணுள்ளவனாய் தன்னிடத்திலேயே இருக்கும் இந்த ஆத்மாவை அறிந்துகொள்வதில்லை. (490)

विक्षेपनाम्नी रजसस्तु शक्तिः प्रवृत्तिहेतुः पुरुषस्य नित्यम् ।
स्थूलादिलिङ्गान्तं अशेषमेतत् यया सदात्मन्यसदेव सूयते ॥ ४९१ ॥

விக்ஷேபநாம்நீ ரஜஸஸ்து சக்தி:
ப்ரவ்ருத்திஹேது: புருஷஸ்ய நித்யம் ।
ஸ்தூலாதி லிங்காந்தமசேஷமேதத்
யயா ஸதாத்மந்யஸதேவ ஸூயதே ॥

**विक्षेपनाम्नी**-விக்ஷேபம் என்று பெயருள்ள, **रजसः शक्तिस्तु**-ரஜோகுணத்தின் சக்தியோவெனில், **नित्यं**-எப்பொழுதும், **पुरुषस्य**-புருஷனுடைய, **प्रवृत्तिहेतुः**-ப்ரவிருத்

திக்குக்காரணம், यया-எதனால், सदात्मनि ஸத்ருபமான ஆத்மாவில், असदेव-அஸத்தாகவே இருக்கும், स्थूलादि-लिङ्गान्तं-ஸ்தூல சரீரம் முதல் ஸூக்ஷ்ம சரீரம் வரையிலான, एतत् अशेषं-இது எல்லாம், सूयते-உண்டாகிறதோ.

எதனால் ஸத்தாகவிருக்கும் ஆத்மாவினிடத்தில் ஸ்தூல சரீரம்முதல் லிங்கசரீரம்முடிய இல்லாததான இவை யெல்லாம் உண்டாகிறதோ, மனிதனுக்கு எப்பொழுதும் பிரவிருத்திக்குக் காரணமாயிருக்கிற அந்த விக்ஷேபம் என்ற பெயருடைய சக்தியானது ரஜோ குணத்தின் சக்தியாகும். (491)

निद्रा यथा पूरुषं अप्रमत्तं समावृणोतीयमपि प्रतीचम् ।
तथाऽऽवृणोत्यावृतिशक्तिः अन्तः विक्षेपशक्तिं परिजृम्भयन्ती ॥

நித்ரா யதா பூருஷமப்ரமத்தம்
ஸமாவ்ருணோதீயமபி ப்ரதீசம் ।
ததாவ்ருணோத்யாவ்ருதிசக்திரந்தர்
விக்ஷேபசக்திம் பரிஜ்ரும்பயந்தீ ॥

अप्रमत्तं-கவனமுள்ள, पूरुषं-புருஷனையும், निद्रा-தூக்கம் यथा-எப்படி, समावृणोति-மறைக்கிறதோ, तथा-அப்படி, इयं-இந்த, आवृतिशक्तिरपि-ஆவரணசக்தியும், अन्तः-உள்ளே, विक्षेपशक्तिं-விக்ஷேபசக்தியை, परिजृम्भयन्ती-வெளிப்படுத்திக்கொண்டு, प्रतीचं-ஆத்மாவை, आवृणोति-மறைக்கிறது.

கவனத்தோடு கூடிய புருஷனையும்கூட தூக்கமானது எப்படி நன்கு மூடிக்கொள்கிறதோ, அப்படியே ஆவரணசக்தி பிரத்யக் ஆத்மாவை மூடிக்கொள்கிறது. உள்ளிருந்து கொண்டு விக்ஷேப சக்தியை வெளிக்கிளப்பிவிடுகிறது. (492)

शक्त्या महत्याऽऽवरणाभिधानया समावृते सति अमलस्वरूपे ।
पुमान् अनात्मन्यहमेष एवेत्यात्मत्वबुद्धिं विदधाति मोहात् ॥ ४९३ ॥

சக்த்யா மஹத்யாவரணாபிதானயா
ஸமாவ்ருதே ஸத்யமல ஸ்வரூபே ।

புமான் அநாத்மன்யஹமேஷ ஏவே-
த்யாத்மத்வபுத்திம் விததாதி மோஹாத் ॥

**आवरणाभिधानया**- ஆவரணம் என்று பெயருள்ள, **महत्या**- பெரிய, **शक्त्या**-சக்தியினுல், **अमलस्वरूपे**-சுத்தஸ்வருபமான, ஆத்மாவானது, **समावृते सति**-மறைக்கப்பட்டபொழுது, **पुमान्**-புருஷன், **अनात्मनि**-ஆத்மாவல்லாததில், **अहं**-நான். **एष एव**-இதுதான், **इति**-என்று, **मोहात्**-அவிவேகத்தால், **आत्मत्वबुद्धिं**-ஆத்மா என்ற எண்ணத்தை, **विदधाति**- செய்கிருன்.

ஆவரணம் என்ற பெயருடைய பெரிய சக்தியினுல் நிர்மல ஸ்வருபமான ஆத்மதத்வம் மூடப்பட்டபோது புருஷன் அனுத்மாவிடத்தில் "இதுதான் நான்" என்று ஆத்மா வென்கிற எண்ணத்தை மோஹத்தினுல் வைக்கிருன். (493)

यथा प्रसुप्तिप्रतिभासदेहे स्वात्मत्वधीरेष तथा ह्यनात्मनि ।
जन्माप्ययक्षुद्भयतृट्छ्रमादीन् आरोपयत्यात्मनि तस्य धर्मान् ॥

யதா ப்ரஸுப்தி ப்ரதிபாஸ தேஹே
ஸ்வாத்மத்வதீரேஷ ததா ஹ்யநாத்மனி ।
ஜந்மாப்யய க்ஷுத்பய த்ருட்ச்ரமாதீன்
ஆரோபயத்யாத்மனி தஸ்ய தர்மான் ॥

**प्रसुप्तिप्रतिभासदेहे**-தூக்கத்தில் தோன்றும் ஸ்வப்ன சரீரத்தில், **यथा**-எப்படியோ, **तथा**- அப்படி, **अनात्मनि**- ஆத்மாவல்லாததில், **स्वात्मत्वधीः**-தன் ஆத்மா என்ற புத்தியுள்ளவனுன, **एषः** இந்தப் புருஷன், **जन्माप्यय**-பிறவி மரணம், **क्षुद्भय**-பசி, பயம், **तृट्छ्रमादीन्**-தாகம், சிரமம் முதலிய, **तस्य धर्मान्**-அந்த அநாத்மாவின் தர்மங்களை, **आत्मनि**-ஆத்மாவில், **आरोपयति**- ஆரோபம் செய்கிருன்.

நல்ல தூக்கத்தில் தோன்றுகிற (ஸ்வப்ன) தேஹத்தில் எப்படி தன் ஆத்மாவென்கிற புத்தியுள்ளவனுக இருக்கிருனே, அப்படியே அனுத்மாவில் தன் ஆத்மாவென்கிற எண்ண

முள்ளவனுக இவன் அதன் (அனுத்மாவின்) தர்மங்களாகிய ஜனனம், மரணம், பசி, பயம், தாஹம், சிரமம் முதலியவை களை ஆத்மாவினிடத்தில் ஏற்றிக்கொள்கிருன். (494)

विक्षेपशक्त्या परिचोद्यमानः करोति कर्माणि उभयात्मकानि ।
भुञ्जान एतत्फलमप्युपात्तं परिभ्रमत्येष भवाम्बुराशौ ॥ ४९५ ॥

விக்ஷேப சக்த்யா பரிசோத்யமாநः
கரோதி கர்மாண்யுபயாத்மகாநி ।
புஞ்ஜான ஏதத் பலமப்யுபாத்தம்
பரிப்ரமத்யேஷ பவாம்புராசௌ ॥

विक्षेपशक्त्या – விக்ஷேபசக்தியால், परिचोद्यमानः-நன்கு தூண்டப்படுகிறவனுக, एषः-இந்த ஜீவன், उभयात्मकानि-(புண்யம் பாபம் என்று) இரண்டுவிதமான, कर्माणि-கர்மாக்களை. करोति-செய்கிருன். उपात्त-ஏற்பட்டதான, एतत्फलमपि-இதன் பலனையும் भुञ्जानः-அனுபவித்துக்கொண்டு भवाम्बुराशौ-ஸம்ஸார ஸாகரத்தில், परिभ्रमति-உழலுகிருன்.

விக்ஷேபசக்தியினுல் ஏவப்பட்டவனுக புண்ணியம் பாபம் என்கிற இரண்டுவிதமான கர்மாக்களையும் செய்கிருன். இதன் பலனுக ஏற்படுவதை அனுபவிக்கிறவனுக ஸம்ஸாரமாகிய ஸமுத்திரத்தில் உழலுகிருன். (495)

अध्यासदोषात् समुपागतोऽयं संसारबन्धः प्रबलः प्रतीचः ।
यद्योगतः क्लिश्यति गर्भवासजन्माप्ययक्लेशभयैरजस्रम् ॥ ४९६ ॥

அத்யாஸதோஷாத் ஸமுபாகதோயம்
ஸம்ஸாரபந்தः ப்ரபலः ப்ரதீசः ।
யத்யோகதः க்லிச்யதி கர்ப்பவாஸ
ஜந்மாப்யய க்லேச பயைரஜஸ்ரம் ॥

यद्योगतः-எதன் சேர்க்கையினுல், अजस्रं-எப்பொழுதும், गर्भवास-கர்ப்பத்தில் வாஸம், जन्माप्यय-பிறவி, மரணம்,

क्लेशभयैः-கிலேசம், பயம் இவைகளால், क्लिश्यति-துன்புறுகிருனே, अयं-இந்த, प्रबलः-உறுதியான, संसारबन्धः-ஸம்ஸாரபந்தம், प्रतीचः-ஆத்மாவிற்கு, अध्यासदोषात्-அத்யாஸம் என்னும் தோஷத்திஞல், समुपागतः-வந்துள்ளது

எதனுடைய சேர்க்கையினுல் கர்ப்பத்தில் வாஸம், பிறப்பு, இறப்பு கஷ்டம், பயம் இவைகளால் இடைவிடாமல் சிரமப்படுகிருனே, அந்த மிக பலமான ஸம்ஸார பந்தம் அத்யாஸமென்ற தோஷத்திஞல் பிரத்யக் ஆத்மாவிற்கு வந்திருக்கிறது.

अध्यासो नाम खल्वेष वस्तुनो योऽन्यथाग्रहः ।
स्वाभाविकभ्रान्तिमूलं संसृतेः आदिकारणम् ॥ ४९७ ॥

அத்யாஸோ நாம கல்வேஷ வஸ்துநோயோந்யதாக்ரஹ: ।
ஸ்வாபாவிக ப்ராந்திமூலம் ஸம்ஸ்ருதேராதிகாரணம் ॥

वस्तुनः-வஸ்துவைப் பற்றிய, यः-எந்த, अन्यथाग्रहः-மாறுதலான அறிவு உண்டோ, एषः-இது, अध्यासो नाम खलु-அத்யாஸம் என்பது (இது) स्वाभाविकभ्रान्तिमूलं-அவித்யையால் ஏற்பட்ட பிராந்தியை மூலமாக உடையது, संसृतेः-ஸம்ஸாரத்திற்கு, आदिकारणं-முதல் காரணம்.

வஸ்துவை வேறு விதமாக கிரஹிப்பது என்ற இந்த அத்யாஸம் ஸ்வாபாவிகமான பிராந்தியை மூலமாயுடையது இது ஸம்ஸாரத்திற்கு ஆதிகாரணம் என்பது பிரஸித்தம் (497)

सर्वानर्थस्य तत् बीजं योऽन्यथाग्रह आत्मनः ।
ततः संसारसंपातः संततक्लेशलक्षणः ॥ ४९८ ॥

ஸர்வாநர்த்தஸ்ய தத் பீஜம் யோந்யதாக்ரஹ ஆத்மந: ।
தத: ஸம்ஸார ஸம்பாத: ஸந்ததக்லேச லக்ஷண: ॥

आत्मनः-ஆத்மாவைப்பற்றி यः अन्यथाग्रहः-மாறுதலான அறிவு யாதொன்று உண்டோ, तत्-அது, सर्वानर्थस्य-எல்லாத் துன்பத்திற்கும், बीजम्-காரணம், ततः-அதிலிருந்து

**संततक्लेशलक्षण:**-தொடர்ந்து எப்பொழுதும் கிலேச்ரூபமான, **संसारसंपात:**-ஸம்ஸாரம் ஏற்படுதல்.

ஆத்மாவை வேறு விதமாக எண்ணுவது தான் எல்லா அனர்த்தத்திற்கும் விதை. அதிலிருந்து தான் துடர்ந்து கிலேச ரூபமாயிருக்கும் ஸம்ஸாரத்தின் உற்பத்தி. (498)

अध्यासादेव संसारो नष्टे अध्यासे न दृश्यते ।
तदेतदुभयं स्पष्टं पश्य त्वं बद्धमुक्तयोः ॥ ४९९ ॥

*அத்யாஸாதேவ ஸம்ஸாரோ நஷ்டேத்யாஸே ந த்ருச்யதே।*
*தததததுபயம் ஸ்பஷ்டம் பச்ய த்வம் பத்த முக்தயோ: ll*

**अध्यासादेव**-அத்யாஸத்தினால்தான், **संसार:**-ஜனனமரண ரூபமான ஸம்ஸாரம் (ஏற்படுகிறது) **अध्यासे**-அத்யாஸம், **नष्टे**-நீங்கிவிட்டால், **न दृश्यते**-காணப்படுகிறதில்லை. **तद् एतद् उभयं**-அந்த இந்த இரண்டும். **बद्धमुक्तयो:**-அவித்யா்பந்தத்தால் கட்டுப்பட்டவனிடத்திலும பந்தத்திலிருந்து விடுபட்டவனிடத்திலும், **स्पष्टं**-நன்கு விளங்குவதை. **त्वं**-நீ **पश्य**-பார்,

அத்யாஸத்திலிருந்து தான் ஜனன மரண ரூபமான ஸம்ஸாரம் ஏற்படுகிறது. அத்யாஸம் போய்விட்டால் ஸம்ஸாரம் காணப்படுகிறதில்லை. இவ்விரண்டு விஷயங்களையும் நீயே தெளிவாக பத்தனிடத்திலும் (கட்டுண்டவனிடத்திலும்) முக்தனிடத்திலும் (விடுபட்டவனிடத்திலும்) பார்த்துக் கொள்ளலாம். (499)

बद्धं प्रवृत्तितो विद्धि मुक्तं विद्धि निवृत्तितः ।
प्रवृत्तिरेव संसारो निवृत्तिर्मुक्तिरिष्यते ॥ ५०० ॥

*பத்தம் ப்ருவ்ருத்திதோ வித்தி முக்தம் வித்தி*
*நிவ்ருத்தித: l*
*ப்ரவ்ருத்திரேவ ஸம்ஸாரோ நிவ்ருத்திர் முக்திரிஷ்யதே ll*

**प्रवृत्तित:**-ப்ரவிருத்தியின் மூலம், **बद्धं**-பந்தமுள்ளவனாக **विद्धि**-அறிந்துகொள். **निवृत्तित:**-நிவ்ருத்தியின் மூலம்,

मुक्त-விடுபட்டவனாக, विद्धि-அறிந்துகொள். (ஆகையால்) प्रवृत्तिरेव -ப்ரவ்ருத்திதான், संसारः-ஸம்ஸாரமாகவும், निवृत्तिः-நிவ்ருத்தி, मुक्तिः-முக்தியாகவும், दृश्यते-கருதப் படுகிறது.

ஒருவனுக்கு உலக வியவஹாரங்களில் பிரவிருத்தியிருந் தால் அதிலிருந்து அவனை பந்தமுள்ளவன் என்று அறிந்து கொள். ஒருவனுக்கு பிரவிருத்தி இல்லாமல் நிவிருத்தியிருந் தால், அதிலிருந்து அவனை முக்தியடைந்தவன் என்று அறிந்து கொள். பிரவிருத்திதான் ஸம்ஸாரம், நிவிருத்தியே முக்தி என்று கருதப்படுகிறது. (500)

आत्मनः सोऽयं अध्यासो मिथ्याज्ञानपुरस्सरः ।
असत्कल्पोऽपि संसारं तनुते रज्जुसर्पवत् ॥ ५०१ ॥

ஆத்மந: ஸோயமத்யாஸோ மித்யாஞான புரஸ்ஸர: ।
அஸத்கல்போபி ஸம்ஸாரம் தநுதே ரஜ்ஜுஸர்பவத் ॥

मिथ्याज्ञानपुरस्सरः - மித்யாஞானத்தை முன்னிட்டு வந்ததான, सोऽयं-அந்த இந்த, आत्मनः अध्यासः-ஆத்மாவின் அத்யாஸமானது, असत्कल्पोपि-அஸத்தைப் போன்றதாக இருந்தாலும், रज्जुसर्पवत्-கயிற்றில் தோன்றும் பாம்புபோல், संसारं-ஸம்ஸாரத்தை, तनुते-விஸ்தரிக்கிறது.

ஆத்மாவிற்கு ஏற்படும் இந்த அத்யாஸம் என்பது பொய்யான அக்ஞானத்தை முன்னிட்டு ஏற்பட்டுள்ளது. இல்லாத பதார்த்தத்தைப் போலவே இருந்தபோதிலும் கயிற்றில் தோன்றும் ஸர்ப்பம் போல, இது ஸம்ஸாரத்தை உண்டு பண்ணுகிறது. (501)

(அ) ஈசுவரனுக்கும் ஜீவனுக்கும் அக்ஞானம் உபாதியாயிருக்கையில் ஜீவன் மாத்திரம் ஏன் பந்தத்திற்கு உட்பட்டவனாகிறான். ஈசுவரன் ஏன் உட்படுவதில்லை, என்ற கேள்விக்கு பதில் சொல்கிறார்:—

उपाधियोगसाम्येऽपि जीववत् परमात्मनः ।
उपाधिभेदान्नो बन्धः तत्कार्यमपि किंचन ॥ ५०२ ॥

உபாதியோக ஸாம்யேபி ஜீவவத் பரமாத்மந: I
உபாதிபேதாத் நோ பந்த: தத்கார்யமபி கிஞ்சந II

**जीववत्**-ஜீவனுக்குப் போல, **परमात्मनः**-பரமாத்மாவுக்கு, **उपाधियोगसाम्येपि**-உபாதியின் ஸம்பந்தம் ஸமமாக இருந்த போதிலும், **उपाधिभेदात्**-உபாதியிலுள்ள வேற்றுமையால், **बन्धः**-பந்தமும், **तत्कार्यमपि**-அதன் காரியமும். **किंचन**-கொஞ்சமும் **नो**-இல்லை.

உபாதியின் ஸம்பந்தம் என்பது ஸமமாயிருந்தபோதிலும் உபாதிகளுக்குள் வித்யாஸமிருப்பதினால், ஜீவனுக்கு இருப்பது போல் பரமாத்மாவிற்கு பந்தமும் அதனால் ஏற்படும் கார்யமும் கொஞ்சமும் கிடையாது. (502)

अस्योपाधिः शुद्धतत्त्वप्रधाना
मायां यत्र त्वस्य नास्त्यल्पभावः ।
सत्त्वस्यैवोत्कृष्टता तेन बन्धो
नो विक्षेपस्तत्कृतो लेशमात्रः ॥ ५०३ ॥

அஸ்யோபாதி: சுத்ததத்வப்ரதாநா
மாயா யத்ர த்வஸ்ய நாஸ்த்யல்பபாவ: I
ஸத்வஸ்யைவோத்க்ருஷ்டதா தேந பந்தோ
நோ விக்ஷேபஸ் தத்க்ருதோ லேசமாத்ர:II

**अस्य**-இந்த ஈசுவரனுடைய, **उपाधिः**-உபாதியான, **माया**-மாயையானது, **शुद्धसत्त्वप्रधाना**-சுத்தமான (ரஜஸ், தமஸ் கலப்பில்லாத) ஸத்வகுணத்தை முக்யமாக உடையது **यत्र**-எந்த மாயையின் நிமித்தமாக, **अस्य**-இந்த ஈசுவரனுக்கு **अल्पभावः**-சிறியதாக ஆகும் தன்மை, **नास्ति**-இல்லையோ (எதில்) **सत्त्वस्यैव**-ஸத்வகுணத்திற்கே, **उत्कृष्टता**-சிறப்புத் தன்மையோ, **तेन**-அதனால், **बन्धः**-பந்தமும், **तत्कृतः**-அதனால் ஏற்பட்ட, **विक्षेपः**-விக்ஷேபமும், **लेशमात्रः**-கொஞ்சம்கூட, **नो**-இல்லை.

இந்த ஈசுவரனுடைய உபாதியான மாயையானது சுத்தமான, ரஜஸ் தமோ குணங்களால் தாக்கப்படாத ஸத்வ குணமொன்றையே முக்யமாகக்கொண்டது. இந்த மாயையின் நிமித்தமாக ஈசுவரனுக்கு சிறிய தன்மை ஏற்படுகிறதில்லை. இதில் ஸத்வகுணமே மேல் நோக்கி இருப்பதால் ஈசுவரனுக்கு பந்தமோ அதன்மூலம் விக்ஷேபமோ சிறிதும் ஏற்படுவதில்லை. (503)

सर्वज्ञोऽप्रतिबद्धबोधविभवः तेनैव देवः स्वयं
मायां स्वां अवलम्ब्य निश्चलतया स्वच्छन्दवृत्तिः प्रभुः ।
सृष्टिस्थित्यदनप्रवेशयमनव्यापारमत्रेच्छया
कुर्वन् क्रीडति तद्रजस्तम उभे संस्तभ्य शक्त्या स्वया ॥

*ஸர்வக்ஞோZப்ரதிபத்த போத விபவ: தேனைவ தேவ: ஸ்வயம்*
*மாயாம் ஸ்வாமிவ்லம்ப்ய நிச்சலதயா ஸ்வச்சந்தவ்ருத்தி: ப்ரபு: ।*
*ஸ்ருஷ்டி ஸ்தித்யதநப்ரவேசயமன வ்யாபார மத்ரேச்சயா*
*குர்வன் க்ரீடதி தத் ரஜஸ்தம உபே ஸம்ஸ்தப்ய சக்த்யா ஸ்வயா ॥*

**स्वच्छन्दवृत्तिः**-தன் இஷ்டப்படி நடப்பவராயும், **प्रभुः**-ப்ரபுவாயும், **देवः**-பிரகாசிப்பவராயும் உள்ள ஈசுவரன், **तेनैव**-அந்த சுத்தஸத்வ ப்ரதானமான மாயை என்னும் உபாதியினாலேயே, **सर्वज्ञः**-எல்லாம் அறிந்தவராகவும், **अप्रतिबद्धबोधविभवः**-தடைபடாத ஞான மகிமையுள்ளவராயும் இருந்துகொண்டு, **निश्चलतया**-அசைவற்ற தன்மையுடனேயே **स्वयं**-தானே, **स्वां**-தன்னுடையதான, **मायां**-மாயையை, **अवलम्ब्य**-ஆச்ரயித்துக்கொண்டு. **अत्र**-இங்கு, **इच्छया**-தன் விருப்பப்படி. **सृष्टिस्थित्यदन** - ஸிருஷ்டி, பரிபாலனம், ஸம்ஹாரம், **प्रवेशयमनव्यापारं**-பிரவேசம் அடக்கியாள்வது இந்த வியாபாரத்தைக், **कुर्वन्**-செய்துகொண்டு, **स्वया शक्त्या**-தனது சக்தியால், **तत् रजः**-அந்த ரஜோகுணம், **तमः**-தமோ

குணம், उभे-இரண்டையும், संस्तभ्य-அடக்கிக் கொண்டு, क्रीडति-விளையாடுகிறார்.

இந்த உபாதியினாலேயே ஈசுவரன் ஸர்வக்ஞராயும் தடை படாத ஞான வைபவமுள்ளவராயும், தன் இஷ்டப்படி நடப்பவராயும் ப்ரபுவாயுமிருந்துகொண்டு அசைவற்ற தன்மையுடனேயே தானே தன்னுடைய மாயையை அவலம்பித்துக்கொண்டு ஜகத்தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம் அதில் பிரவேசம், அதன் நியமனம், ஆகிய செய்கையை தன் இச்சையினாலேயே செய்துகொண்டு, தன்னுடைய சக்தியினால் அந்த ரஜஸ் தமஸ் இரண்டையும் வேலை செய்யமுடியாமல் அடக்கிக்கொண்டு விளையாடுகிறார். (504)

तस्मात् आवृतिविक्षेपौ किंचित् कर्तुं न शक्नुतः ।
स्वयमेव स्वतन्त्रोऽसौ तत्प्रवृत्तिनिरोधयोः ॥ ५०५ ॥

*தஸ்மாத் ஆவ்ருதிவிக்ஷேபௌ கிஞ்சித் கர்த்தும் ந சக்னுத: ।*
*ஸ்வயமேவ ஸ்வதந்த்ரோஸௌ தத்ப்ரவ்ருத்தி நிரோதயோ: ॥*

तस्मात्-ஆகையால், आवृतिविक्षेपौ-ஆவரணமும் விக்ஷேபமும், किंचित्-(ஈசுவரனிடம்) ஒன்றையும், कर्तुं-செய்வதற்கு, न शक्नुतः-சக்தியுள்ளவைகளில்லை, तत्प्रवृत्तिनिरोधयोः-அவைகளை ப்ரவர்த்திக்கும்படி செய்வதிலும் தடுப்பதிலும், असौ-அந்த ஈசுவரன், स्वयमेव-தானே, स्वतन्त्रः-ஸ்வதந்தரர்.

ஆகையினால் ஈசுவரனிடத்தில் ஆவரணம் விக்ஷேபம் என்கிற இரண்டும் ஒன்றும் செய்யமுடியவில்லை. ஈசுவரன் அந்த ஆவரணம் விக்ஷேபம், இரண்டையும் பிரவர்த்திப்பதிலும் அடக்குவதிலும் தானே ஸ்வதந்திரமாயிருப்பவர்.

तमेव साधुकर्मेति श्रुतिर्वक्ति महेशितुः ।
निग्रहेऽनुग्रहे शक्तिः आवृतिक्षेपयोर्यतः ॥ ५०६ ॥

*தமேவ ஸாதுகர்மேதி ச்ருதிர் வக்தி மஹேசிது: ।*
*நிக்ரஹேऽநுக்ரஹே சக்தி: ஆவ்ருதிக்ஷேபயோர் யத: ॥*

**साधुकर्म इति**- " இவர்தான் நல்ல கர்மாவையும் கெட்ட கர்மாவையும் செய்யும்படி செய்கிறார் " என்ற **श्रुतिः**-வேதம், **निग्रहे**- நிக்ரஹத்திலும், **अनुग्रहे**-அநுக்ரஹத்திலும், **महेशितुः**- ஈசுவரனுடைய, **तमेव**-அந்த ஸ்வாதந்த்ர்யத்தையே, **वक्ति**- சொல்கிறது. **यतः**-எந்த ஈசுவரனிடமிருந்து, **आवृतिक्षेपयोः**- ஆவரண விக்ஷேபங்களுக்கு, **शक्तिः**-சக்தி ஏற்படுகிறதோ.

**'एष ह्येव साधु कर्म कारयति तं यमुन्निनीषते । एष ह्येवासाधु कर्म कारयति तं यमधो निनीषते ।'**

என்ற சுருதி நிக்ரஹத்திலும் அநுக்ரஹத்திலும் ஈசுவரனுக்கு பூர்ணஸ்வாதந்தர்யம் இருப்பதாக சொல்கிறது. ஆவரண விக்ஷேபங்களுக்கு சக்தியும் ஈசுவரனிடமிருந்துதான் ஏற்படுகிறது. ஆவரணம், விக்ஷேபம் இரண்டிற்கும் சக்தியைக் கொடுத்து அவைகளை ஏவுவது ஈசுவரன்தான் ஆவரண விக்ஷேபங்களைக் கொடுத்து ஒருவனை நிக்ரஹம் செய்கிறார். அவைகளை விலக்கி மற்றொருவனுக்கு அனுக்ரஹம் செய்கிறார். இதில் அவருக்கு பூர்ண ஸ்வாதந்தர்யம் உண்டு என்று சுருதி சொல்கிறது. ஆவரண விக்ஷேபங்களுக்கே சக்தியைக் கொடுத்து அவைகளை ஏவுகின்ற ஈசுவரனை அவை எப்படி தன்வசப்படுத்தமுடியும்? ஆகையால் ஈசுவரனுக்கு ஆவரண விக்ஷேபங்கள் கிடையாது.

(அ) ஜீவனுக்கு இவ்வித ஸ்வாதந்திரியம் இல்லாமல் ஸத்வம் குறைந்து ரஜஸ் தமஸ் மேலிட்டிருப்பதினால் பந்தம் ஏற்படுகிறது என்பதைக் காட்டுகிறார்:—

**रजसः तमसश्चैव प्राबल्यं सत्त्वहानतः ।**
**जीवोपाधौ तथा जीवे तत्कार्यं बलवत्तरम् ॥ ५०७ ॥**

*ரஜஸ: தமஸச்சைவ ப்ராபல்யம் ஸத்வஹாநத: ।*
*ஜீவோபாதௌ ததா ஜீவே தத்கார்யம் பலவத்தரம் ॥*

**जीवोपाधौ**-ஜீவனுடைய உபாதியில், **सत्त्वहानतः**-ஸத்வ குணம் மங்கியிருப்பதால், **रजसः** – ரஜோகுணத்திற்கும்,

**तमसश्चैव**-தமோகுணத்திற்கும், **प्राबल्यं**-அதிக பலம் உள்ளது **तथा** - அப்படியே, **जीवे** - ஜீவனிடம், **तत्कार्यं** - அந்த ரஜஸ்தமோ குணங்களின் காரியமும, **बलवत्तरं** - மிகுந்த பலமுள்ளதாயிருக்கிறது.

ஜீவனுடைய உபாதியில் ஸத்வம் மங்கி, ரஜஸிற்கும் தமஸிற்கும் பிரபலமாயிருக்கும் தன்மையிருக்கிறது. அப்படியே அவர் ரஜோகுண தமோகுணங்களின் கார்யமும் ஜீவனிடத்தில் மிகவும் பலமாயிருக்கிறது.

तेन बन्धोऽस्य जीवस्य संसारोऽपि च तत्कृतः ।
संप्राप्तः सर्वदा यत्र दुःखं भूयः स ईक्षते ॥ ५०८ ॥

தேந பந்தோஸ்ய ஜீவஸ்ய ஸம்ஸாரோபி ச தத்க்ருத: ।
ஸம்ப்ராப்த: ஸர்வதா யத்ர துக்கம் பூய: ஸ ஈக்ஷதே ॥

**तेन**-அதனால், **अस्य जीवस्य**-இந்த ஜீவனுக்கு, **बन्धः**-பந்தமும், **तत्कृतः**-அதனால் ஏற்பட்ட, **संसारोपि च**-ஸம்ஸாரமும், **संप्राप्तः**-வந்துள்ளது, **यत्र**-எதில், **सः**-அவன், **सर्वदा**-எப்பொழுதும், **भूयः** அதிகமாக, **दुःखं**-துன்பத்தை, **ईक्षते**-காண்கிறுன்.

அதனால் இந்த ஜீவனுக்கு பந்தமும் அதனால் உண்டாகும் ஸம்ஸாரமும் ஏற்படுகிறது. இந்த ஸம்ஸாரத்தில் அவன் ஏராளமாக எப்பொழுதும் துக்கத்தை அனுபவிக்கிறுன். (508)

एतस्य संसृतेर्हेतुः अध्यासोऽर्थविपर्ययः ।
अध्यासमूलं अज्ञानं आहुः आवृतिलक्षणम् ॥ ५०९ ॥

ஏதஸ்ய ஸம்ஸ்ருதேர் ஹேது: அத்யாஸோ-
ऽர்த்தவிபர்யய: ।
அத்யாஸமூலமக்ஞானம் ஆஹுராவ்ருதிலக்ஷணம் ॥

**एतस्य**-இந்த, **संसृतेः**-ஸம்ஸாரத்திற்கு, **अर्थविपर्ययः**-பொருளை மாற்றியறிவது என்னும், **अध्यासः**-அத்யாஸம், **हेतुः**-காரணம், **आवृतिलक्षणं**-மறைத்தல் வடிவமான, **अज्ञानं**-

அக்ஞானத்தை, अध्यासमूलं—அத்யாஸத்திற்கு காரணமாக, आहुः—சொல்கிறார்கள்.

இந்த ஸம்ஸாரத்திற்குக் காரணம் விஷயத்தை மாற்றி யறிவது என்னும் அத்யாஸம். அத்யாஸத்திற்குக் காரணம் மறைத்தலே லக்ஷணமாயுடைய அக்ஞானம் என்று சொல்கிறார்கள். (509)

(அ) இவ்விதம் ஸம்ஸாரத்திற்கு மூலகாரணமாயிருக்கும் அக்ஞானத்தைக் கூறிவிட்டு இனி அந்த அக்ஞானத்தைப் போக்கடிக்கவேண்டுமானால் அதற்கு நேர் விரோதியான ஞானத்தினால்தான் ஸாத்தியப்படும். கர்மாவினாலேயோ வேறு எந்த ஸாதனத்தினாலேயோ முடியாது என்பதை வற்புறுத்திச் சொல்கிறார்:—

अज्ञानस्य निवृत्तिस्तु ज्ञानेनैव न कर्मणा ।
अविरोधितया कर्म नैवाज्ञानस्य बाधकम् ॥ ५१० ॥

அக்ஞானஸ்ய நிவ்ருத்திஸ்து ஞாநேநைவ ந கர்மணா ।
அவிரோதிதயா கர்ம நைவாக்ஞாநஸ்ய பாதகம் ॥

ज्ञानेनैव-ஞானத்தால்தான், अज्ञानस्य - அக்ஞானத்திற்கு, निवृत्तिः-நாசம் ஏற்படுகிறது. कर्मणा-கர்மாவினால், न-ஏற்படாது, अविरोधितया-விரோதமில்லாததால், कर्म-கர்மா, नैव अज्ञानस्य बाधकं-அக்ஞானத்தை அழிப்பதாக ஆகாது.

அக்ஞானத்தின் நிவிருத்தியோ ஞானத்தினால் தான் ஸாத்யம், கர்மாவால் ஸாத்யமில்லை. கர்மா அக்ஞானத்திற்கு விரோதியாயில்லாததினால் கர்மா அக்ஞானத்தை பாதிக்கக் கூடியதேயில்லை. (510)

कर्मणा जायते जन्तुः कर्मणैव प्रलीयते ।
कर्मणः कार्यमेवैषा जन्ममृत्युपरम्परा ॥ ५११ ॥
नैतस्मात् कर्मणः कार्यं अन्यदस्ति विलक्षणम् ॥ ५१२ ॥

கர்மணா ஜாயதே ஜந்து: கர்மணைவ ப்ரலீயதே ।
கர்மண: கார்யமேவைஷா ஜன்ம ம்ருத்யுபரம்பரா ।

நைதஸ்மாத் கர்மண: கார்யம் அந்யதஸ்தி விலக்ஷணம் ||

कर्मणा-கர்மாவினால், जन्तुः-பிராணி, जायते-பிறக்கிறது. कर्मणैव-கர்மாவினால் தான், प्रलीयते-நாசமடைகிறது. एषा-இந்த, जन्ममृत्युपरंपरा एव-பிறவி, மரணம் இவற்றின் பரம்பரைதான், कर्मणः कार्यं-கர்மாவின் காரியம், एतस्मात्-இதைக்காட்டிலும், विलक्षणं-விலக்ஷணமான, अन्यत्-வேறு, कार्यं-காரியம், कर्मणः-கர்மாவிற்கு, नास्ति-இல்லை.

கர்மாவினால் தான் ஜந்து பிறக்கிறது. கர்மாவினால் தான் இறக்கிறது. தொடர்ச்சியாக வரும் ஜனன மரணங்கள் தான் கர்மாவின் கார்யம். இதைத்தவிர விலக்ஷணமான வேறு காரியமொன்றும் கர்மாவிற்குக் கிடையாது. (511-512)

अज्ञानकार्यं तत्कर्म यतोऽज्ञानेन वर्धते ।
यद्येन वर्धते तेन नाशस्तस्य न सिध्यति ॥ ५१३ ॥

அக்ஞானகார்யம் தத் கர்ம யதோऽக்ஞானேந வர்த்ததே |
யத் யேந வர்த்ததே தேந நாசஸ்தஸ்ய ந ஸித்யதி ||

यतः-எதனால், अज्ञानेन-அக்ஞானத்தால், वर्धते-வளருகிறதோ, (அதனால்) तत् कर्म-அந்த கர்மா, अज्ञानकार्यं-அக்ஞானத்தின் காரியம், यत्-எது, येन-எதனால், वर्धते-வளருகிறதோ, तस्य-அதற்கு, तेन-அதனால், नाशः-அழிவு, न सिध्यति-ஏற்படாது.

அந்த கர்மாவும் அக்ஞானத்தினால் விருத்தியடைகிறபடியால், அது அக்ஞானத்தின் கார்யமேயாகும். எது எதனால் விருத்தியடைகிறதோ, அதற்கு அதனால் நாசம் ஏற்படாது. (513)

येन यस्य सहावस्थानिरोधाय न कल्पते ।
नाशकत्वं तदुभयोः को नु कल्पयितुं क्षमः ॥ ५१४ ॥

யேந யஸ்ய ஸஹாவஸ்த்தா நிரோதாய ந கல்பதே |
நாசகத்வம் தது பயோ: கோ நு கல்பயிதும் க்ஷம: ||

यस्य-எதற்கு, येन-எதனேடு, सहावस्था-கூட இருப்பதை, निरोधाय-தடுப்பதற்கு, न कल्पते-(ஒருவரும்) சக்தியுள்ளவனில்லையோ, तदुभयोः-அவ்விரண்டிற்கும், नाशकत्वं-(ஒன்றுக்கொன்று) அழிக்கும் தன்மையை, कल्पयितुं-உண்டுபண்ணுவதற்கு, को नु-எவன் தான், क्षमः-சக்தியுள்ளவன் ?

ஒன்றுக்கொன்று பிரிக்கமுடியாதபடி இரண்டு வஸ்துக்கள் சேர்ந்தேயிருக்குமானல் அவற்றில் ஒன்று மற்றொன்றை எப்படி அழிக்கக்கூடும் ? அழிக்கும் சக்தியை அதற்கு யார்தான் கொடுக்கமுடியும் ? (514)

सर्वं कर्माविरोध्येव यतोऽज्ञानस्य सर्वदा ।
ततोऽज्ञानस्य विच्छित्तिः कर्मणा नैव सिध्यति ॥ ५१५ ॥

ஸர்வம் கர்மாவிரோத்யேவ யதோஉக்ஞாநஸ்ய ஸர்வதா ।
ததோஉக்ஞாநஸ்ய விச்சித்தி: கர்மணா நைவ ஸித்யதி ॥

यतः-எதனுல், सर्वं कर्म-எல்லா கர்மாவும், सर्वदा-எப்பொழுதும், अज्ञानस्य-அக்ஞானத்திற்கு, अविरोधि एव-விரோதியாகவே இல்லையோ, ततः-அதனுல், कर्मणा-கர்மாவினுல், अज्ञानस्य-அக்ஞானத்தின், विच्छित्तिः-நாசம், नैव सिध्यति-ஏற்படவே ஏற்படாது.

எல்லாக் கர்மாவுமே எப்பொழுதும் அக்ஞானத்திற்கு விரோதியாகவே இல்லை. ஆகையால் அக்ஞானத்தின் நிவிருத்தி கர்மாவினுல் ஏற்படவே ஏற்படாது (515)

यस्य प्रध्वंसजनको यत्संयोगोऽस्ति तत्क्षणे ।
तयोरेव विरोधित्वं युक्तं भिन्नस्वभावयोः ॥ ५१६ ॥

யஸ்ய ப்ரத்வம்ஸ ஜநக: யத் ஸம்யோகோஸ்தி
தத்க்ஷணே ।
தயோரேவ விரோதித்வம் யுக்தம் பிந்ந ஸ்வபாவயோ: ॥

यत्संयोगः-எதன் சேர்க்கை, तत्क्षणे-அதே சமயத்தில், यस्य-எதன், प्रध्वंसजनकः-அழிவை உண்டுபண்ணுகிறதாக, अस्ति-இருக்கிறதோ, भिन्नस्वभावयोः-வெவ்வேறு ஸ்வபாவ

முள்ள, तयोरेव - அவ்விரண்டிற்கும் தான், विरोधित्वं- விரோதியாயிருக்கும் தன்மை, युक्तं-நியாயம்.

எதனுடைய சேர்க்கை அதே க்ஷணத்தில் எதனுடைய நாசத்தை உண்டுபண்ணுகிறதோ, அவ்வித வேறுபட்ட ஸ்வபாவங்களோடு கூடிய இரண்டு பதார்த்தங்களுக்குள் தான் விரோதியாயிருக்கும் தன்மை நியாயமாகும். (516)

तमःप्रकाशयोः यद्वत् परस्परविरोधिता ।
अज्ञानज्ञानयोः तद्वत् उभयोरेव दृश्यते ॥ ५१७ ॥

தம: ப்ரகாசயோர் யத்வத் பரஸ்பரவிரோதிதா 1
அக்ஞானஞானயோ: தத்வத் உபயோரேவ த்ருச்யதே ॥

यद्वत्–எப்படி, तमःप्रकाशयोः-இருளுக்கும் வெளிச்சத்திற்கும், परस्परविरोधिता-ஒன்றுக்கொன்று விரோதியாயிருக்கும் தன்மை உள்ளதோ, तद्वत्-அதுபோலவே, अज्ञान-ज्ञानयोः उभयोरेव - அச்ஞானம் ஞானம் இவ்விரண்டிற்கும் தான், दृश्यते-(விரோதம்) காணப்படுகிறது.

இருட்டிற்கும் வெளிச்சத்திற்கும் எப்படி பரஸ்பரம் விரோதியாயிருக்கும் தன்மையோ, அப்படியே அக்ஞானம், ஞானம் இவ்விரண்டிற்குந்தான் பரஸ்பரம் விரோதியா யிருக்கும் தன்மை காணப்படுகிறது. (517)

न ज्ञानेन विनाऽज्ञाननाशः केनापि सिध्यति ।
तस्मात् अज्ञानविच्छित्त्यै ज्ञानं संपादयेत् सुधीः ॥ ५१८ ॥

ந ஞானேந விநாZக்ஞாநநாச: கேநாபி ஸித்யதி 1
தஸ்மாதக்ஞாந விச்சித்த்யை ஞாநம் ஸம்பாதயேத் ஸுதீ: ॥

ज्ञानेन विना-ஞானத்தைத்தவிற, केनापि-வேறு எதனாலும் अज्ञाननाशः-அக்ஞானத்தின் நாசம், न सिध्यति-ஏற்படாது, तस्मात्-ஆகையால், सुधीः-நல்ல புத்தியுள்ளவன், अज्ञान-विच्छित्त्यै-அக்ஞானத்தின் நாசத்திற்காக, ज्ञानं-ஞானத்தை, संपादयेत्-ஸம்பாதிக்கவேண்டும்.

அந்த அக்ஞானத்திற்கு ஞானத்தைத் தவிற வேறு எதினாலும் நாசம் ஏற்படாது. ஆகையால் அக்ஞானம் போவதற்கு நல்ல புத்தியுள்ளவன் ஞானத்தையே ஸம்பாதிக்க வேண்டும். (518)

(அ) ஸம்ஸார பந்தம் போவதற்கு அத்யாஸம் போக வேண்டுமென்றும், அத்யாஸம் போவதற்கு அக்ஞானம் போகவேண்டுமென்றும், அக்ஞானம் போவதற்கு ஞானம் ஒன்றுதான் ஸாதனமென்றும், இதுவரை ஸ்ரீமத் ஆசார்யார் சொல்லிவந்தார். இனி அந்த ஞானம் ஏற்படுவதற்கு என்ன வேண்டுமென்பதைச் சொல்லவாரம்பிக்கையிலேயே, ஆத்ம ஞானம் ஏற்படுவதற்கு ஆத்மாவை ஆத்மாவல்லாததிலிருந்து பிரித்து அறியவேண்டியது அவசியம் என்கிறார். அவ்விதம் பிரிப்பதில் என்ன சிரமம் என்று கேட்டால், ஆத்மாவின் தன்மை எவ்விதம், அனாத்மாவின் தன்மை எவ்விதம் என்று தெரிந்துகொள்ளாமல் அவ்விரண்டையும் பிரிப்பது மிகவும் சிரமம் என்றும், வேதாந்தமறியாதவர்கள் தன் யுக்தியினாலேயே பிரித்துப்பார்க்க யத்தனிப்பவர்கள் பலவிதமாகத் தவறியிருக்கிறார்களென்றும் காட்டுவதற்கு அவசியம் ஏற்பட்டது. ஆகையால் இவ்விடத்தில் ஆத்மாவைப்பற்றி ஏற்பட்டிருக்கும் ஒவ்வொரு வாதமாக எடுத்துச் சொல்கிறார்:—

आत्मानात्मविवेकेन ज्ञानं सिध्यति नान्यथा ।
युक्त्याऽऽत्मानात्मनोः तस्मात् करणीयं विवेचनम् ।
अनात्मन्यात्मताबुद्धिग्रन्थिर्येन विदीर्यते ॥ ५१९ ॥

ஆத்மாநாத்மவிவேகேந ஞாநம் ஸித்யதி நாந்யதா ।
யுக்த்யாऽऽத்மாநாத்மநோஸ் தஸ்மாத் கரணீயம்
விவேசநம் ।
அநாத்மந்யாத்மதாபுத்திக்ரந்திர் யேந விதீர்யதே ॥

आत्मानात्मविवेकेन – ஆத்மாவையும் அநாத்மாவையும் பிரித்தறிவதனால், ज्ञानं–ஞானம், सिध्यति–ஏற்படும், अन्यथा–வேறுவிதமாக, न–ஏற்படாது, तस्मात्–ஆகையால், युक्त्या–யுக்தியினால், आत्मानात्मनोः–ஆத்மா, அநாத்மா இவைகளின், विवेचनं–பிரித்து அறிவது, करणीयम्–செய்யத்தக்கது, येन–

எதனால், अनात्मनि- அநாத்மாவில் आत्मताबुद्धिग्रन्थिः-ஆத்மா என்ற எண்ணமாகிற முடிச்சு, विदीर्यते-அறுக்கப்படுமோ.

ஆத்மா அனாத்மா இரண்டையும் பிரித்தறிவதினால்தான் ஞானம் ஏற்படுகிறது. வேறுவிதமாய் ஏற்படாது. ஆகையால் யுக்தியைக்கொண்டு அந்த ஆத்மாவிற்கும் அனாத்மாவிற்கும் உள்ள வித்யாஸத்தைத் தெரிவிக்கும் விவேசனம் செய்ய வேண்டும். இந்த விவேசனத்தால், ஆத்மாவல்லாததை ஆத்மா என்று எண்ணுவதாகிற முடிச்சு அறுந்துபோய்விடும்.

आत्मानात्मविवेकार्थं विवादोऽयं निरूप्यते ।
येनात्मानात्मनोस्तत्त्वं विविक्तं प्रस्फुटायते ॥ ५२० ॥

ஆத்மாநாத்ம விவேகார்த்தம் விவாதோऽயம் நிரூப்யதே ।
யேநாத்மாநாத்மநோஸ் தத்வம் விவிக்தம்
ப்ரஸ்புடாயதே ॥

आत्मानात्मविवेकार्थं – ஆத்மாவையும் அநாத்மாவையும் பிரித்துக்காட்டுவதற்காக अयं विवादः-இந்த விவாதம், निरूप्यते-நிருபணம் செய்யப்படுகிறது, येन-எதனால், आत्मानात्मनोः तत्त्वं-ஆத்மா அநாத்மா இவ்விரண்டின் உண்மை ஸ்வரூபம், विविक्तं-நன்கு பிரித்து, प्रस्फुटायते-தெளிவாக்கப் படுமோ.

ஆத்மாவையும் அனாத்மாவையும் பிரித்துக் காட்டுவதற்காக, இந்த பலவித வாதம் நிருபணம் செய்யப்படுகிறது. இந்த நிருபணத்தினால் ஆத்மா அனாத்மா இரண்டின் வாஸ்தவமான தன்மை தனித்தனியே நன்கு தெளிவுபடுத்தப்படுகிறது.

मूढा अश्रुतवेदान्ताः स्वयं पण्डितमानिनः ।
ईशप्रसादरहिताः सद्गुरोश्च बहिर्मुखाः ।
विवदन्ति प्रकारं तं शृणु वक्ष्यामि सादरम् ॥ ५२१ ॥

மூடா அச்ருதவேதாந்தா: ஸ்வயம் பண்டிதமாநிந: ।
ஈசப்ரஸாத ரஹிதா: ஸத்குரோச்ச பஹிர்முகா: ।
விவதந்தி ப்ரகாரம் தம் ச்ருணு வக்ஷ்யாமி ஸாதரம் ॥

अश्रुतवेदान्ताः - வேதத்தின் கடைசியிலுள்ள உபநிஷத்துக்களின் கருத்துக்களைக் கேட்டுத்தெரிந்து கொள்ளாதவர்களாயும், स्वयं पण्डितमानिनः - தானே கல்வியறிவுள்ளவன் என்று கர்வம் கொண்டவர்களும், ईशप्रसाद-रहिताः - ஈசுவரனின் அருளைப்பெறுதவர்களும், सद्गुरोः बहिर्मुखाः - நல்ல குருவை அண்டாமல் வெளிப்பார்வையுள்ளவர்களுமான, मूढाः - மூடர்கள், विवदन्ति - (ஆத்ம விஷயமாக) வியவஹாரம் செய்கிறுர்கள், तं प्रकारं - அந்த விதத்தை, वक्ष्यामि - சொல்கிறேன், सादरं - கவனமாக, शृणु - கேள்.

வேதாந்தத்தின் கருத்தைக் கேட்டுத்தெரிந்து கொள்ளாதவர்களாயும், தானுகவே தங்களை வித்வான் என்று எண்ணிக்கொள்பவர்களாயும், ஈசுவரனுடைய அநுக்ரஹத்தைப் பெருதவர்களாயும், நல்ல குருவினிடமிருந்து வெளியில் முகத்தைத் திருப்பினவர்களாயும், இருக்கிற மூடர்கள் பலவிதமாய் சொல்கிறுர்கள் (விவாதம் செய்து கொள்கிறுர்கள்) அந்த முறையை சொல்கிறேன். கவனமாய்க்கேள். (521)

अत्यन्तपामरः कश्चित् पुत्र आत्मेति मन्यते ।
आत्मनीव स्वपुत्रेऽपि प्रबलप्रीतिदर्शनात् ॥ ५२२ ॥

*அத்யந்தபாமர: கச்சித் புத்ர ஆத்மேதி மந்யதே ।*
*ஆத்மநீவ ஸ்வபுத்ரேபி ப்ரபலப்ரீதிதர்சநாத் ॥*

अत्यन्तपामरः - மிகவும் பாமரனை, कश्चित् - ஒருவன், आत्मनीव - தன்னிடத்தில் போல், स्वपुत्रेपि - தனது பிள்ளையிடத்திலும், प्रबलप्रीतिदर्शनात् - அதிகமான ப்ரீதி காணப்படுவதால், पुत्रः - புத்திரன், आत्मा इति - ஆத்மா என்று, मन्यते - எண்ணுகிறுன்,

மிகவும் பாமரனுயிருக்கும் ஒருவன், தன்னிடத்தில் போலவே தன் புத்திரனிடத்திலும் வெகு புலமான பிரீதி காணப்படுவதிஞல், புத்திரனை ஆத்மா என்று எண்ணுகிறுன்.

पुत्रे तु पुष्टे पुष्टोऽहं नष्टे नष्टोऽहं इत्यतः ।
अनुभूतिबलाच्चापि युक्तितोऽपि श्रुतेरपि ॥ ५२३ ॥

புத்ரே து புஷ்டே புஷ்டோऽஹம் நஷ்டே
நஷ்டோऽஹமித்யத: ।
அநுபூதிபலாச்சாபி யுக்திதோபி ச்ருதேரபி ॥

**पुत्रे पुष्टे**-பிள்ளை புஷ்டியுள்ளவனுனால், **अहं पुष्टः**-நான் புஷ்டியுள்ளவன், **नष्टे**-(பிள்ளை) நாசமடைந்தால், **अहं**-நான், **नष्टः**-நாசம் அடைந்து விட்டேன், **इत्यतः**-என்று எண்ணும் காரணத்தால், **अनुभूतिबलाच्चापि**-லோகாநுபவ பலத்தாலும், **युक्तितोपि**-யுக்தியினுலும், **श्रुतेरपि**-ச்ருதியினுலும், இவ்வாறு சொல்கிருன்.

"புத்திரன் புஷ்டியுடனிருந்தாலே நான் புஷ்டியுடன் இருக்கிறேன். அவன் நஷ்டமாய்ப்போனுல் நானே நஷ்டமாய் போய்விட்டேன்" என்றிருப்பதினுல் அனுபவத்தின் பலத்தை வைத்துக்கொண்டும், யுக்தியினுலும், வேத வாக்கியத்தைக் கொண்டும் இவ்விதம் சொல்கிருன். (523)

आत्मा वै पुत्रनामाऽसि इत्येवं च वदति श्रुतिः ॥ ५२४ ॥

ஆத்மா வை புத்ரநாமாஸீத்யேவம் ச வததி ச்ருதி: ॥

**पुत्रनामा**-புத்திரன் என்று பெயருள்ள, **आत्मा वै**-ஆத்மாவாகவே, **असि**-இருக்கிருய், **इत्येवं**-என்று இவ்விதமாக, **श्रुतिः**-ச்ருதியானது, **वदति**-சொல்கிறது.

"புத்திரன் என்ற பெயருடன் நீயே ஆத்மாவாய் இருக்கிருய்" என்று இவ்விதமாய் வேதம் சொல்கிறது. (524)

दीपात् दीपो यथा तद्वत् पितुः पुत्रः प्रजायते ।
पितुर्गुणानां तनये बीजाङ्कुरवत् ईक्षणात् ॥ ५२५ ॥

தீபாத் தீபோ யதா தத்வத் பிது: புத்ர: ப்ரஜாயதே ।
பிதுர் குணுனும் தநயே பீஜாங்குரவதீக்ஷணுத் ॥

**यथा** - எப்படி, **दीपात्** - ஒரு தீபத்திலிருந்து, **दीपः**-மற்றொரு தீபமோ, **तद्वत्**-அதுபோலவே, **पितुः**-தந்தையிடமிருந்து, **पुत्रः**-பிள்ளை, **प्रजायते** - உண்டாகிருன்,

**बीजाङ्कुरवत्**-விதையின் குணங்கள் முளையில் போல், **पितुः**-தந்தையின், **गुणानां**-குணங்கள், **तनये**-பிள்ளையிடம், **ईक्षणात्**-காண்பதாலும்.

தீபத்திலிருந்து தீபம் ஏற்றுவதுபோலவே தகப்பனரிடமிருந்து புத்திரன் பிறக்கிருன். விதையிலுள்ள குணங்கள் முளையில் ஏற்படுவதுபோல தகப்பனரின் குணங்கள் புத்திரனிடம் காணப்படுவதால் என்று யுக்தியையும் பிரமாணமாய் சொல்கிருன். (525)

अतोऽयं पुत्र आत्मेति मन्यते भ्रान्तिमत्तमः ।

அதோऽயம் புத்ர ஆத்மேதி மந்யதே ப்ராந்திமத்தம: ।

**अतः**-ஆகையால, **अयं पुत्रः**-இந்த புத்திரன், **आत्मा**-ஆத்மா, **इति**-என்று, **भ्रान्तिमत्तमः**-மிகவும பிராந்தியுளளவன், **मन्यते**-எண்ணுகிருன்.

ஆகையால் (அனுபவம், வேதம், யுக்தி எல்லாமிருப்பதினல்) இந்த புத்திரன் ஆத்மா என்று மிகவும் பிராந்தியுள்ளவன் எண்ணுகிருன்

तन्मतं दूषयत्यन्यः पुत्र आत्मा कथं त्विति ॥ ५२६ ॥

தன்மதம தூஷயத்யந்ய: புத்ர ஆத்மா கதம் த்விதி ॥

**तन्मतं**-அவனுடைய மதத்தை, **अन्यः**-வேறு ஒருவன், **पुत्रः**-புத்திரன், **कथं तु आत्मा**-எப்படி ஆத்மாவாக முடியும், **इति**-என்று **दूषयति**-தூஷிக்கிருன்.

இந்த அபிப்பிராயத்தை வேருெருவன் புத்திரன் எப்படி ஆத்மா ஆவான் என்று தூஷிக்கிருன். (526)

प्रीतिमात्रात् कथं पुत्र आत्मा भवितुमर्हति ।
अन्यत्रापीक्ष्यते प्रीतिः क्षेत्रपात्रधनादिषु ॥ ५२७ ॥

पुत्रात् विशिष्टा देहेऽस्मिन् प्राणिनां प्रीतिरिष्यते ।
प्रदीप्ते भवने पुत्रं त्यक्त्वा जन्तुः पलायते ॥ ५२८ ॥

तं विक्रीणाति देहार्थं प्रतिकूलं निहन्ति च ।
तस्मात् आत्मा तु तनयो न भवेच्च कदाचन ॥ ५२९ ॥

ப்ரீதிமாத்ராத் கதம் புத்ர ஆத்மா பவிதுமர்ஹதி ।
அந்யத்ராபீக்ஷ்யதே ப்ரீதி: க்ஷேத்ரபாத்ரதநாதிஷு ॥
புத்ராத் விசிஷ்டா தேஹேऽஸ்மின் ப்ராணிநாம் ப்ரீதிரிஷ்யதே ।
ப்ரதீப்தே பவநே புத்ரம் த்யக்த்வா ஜந்து: பலாயதே ॥
தம் விக்ரீணாதி தேஹார்த்தம ப்ரதிகூலம் நிஹந்தி ச ।
தஸ்மாதாத்மா து தநயோ ந பவேச்ச கதாசந ॥

प्रीतिमात्रात्–ப்ரீதி இருப்பதனுல்மட்டும், पुत्रः–புத்திரன், आत्मा–ஆத்மாவாக, भवितुं–ஆவதற்கு, कथं–எப்படி, अर्हति–தக்கவனுகிருன்? अन्यत्रापि–வேறு இடத்திலும், क्षेत्रपात्रधनादिषु–நிலம், பாத்திரம், பணம் முதலியவைகளில், प्रीतिः–ப்ரீதியானது, ईक्ष्यते–காணப்படுகிறது. प्राणिनां–பிராணிகளுக்கு, अस्मिन् देहे–இந்த தேஹத்தில், पुत्रात्–பிள்ளையைக் காட்டிலும், विशिष्टा–மேலான, प्रीतिः–ப்ரீதி இருப்பதாக, इष्यते–கருதப்படுகிறது. भवने–வீடு, प्रदीप्ते–நெருப்பு பற்றி எரியும்பொழுது, जन्तुः–பிராணி, पुत्रं–பிள்ளையை, त्यक्त्वा–விட்டுவிட்டு, पलायते–ஓடுகிருன். देहार्थे–தன் சரீர சுகத்திற்காக, तं–அந்த புத்திரனை, विक्रीणाति–விற்றுவிடுகிருன், प्रतिकूलं–எதிரியாக உள்ள புத்திரனை, निहन्ति च–கொல்லவும் செய்கிருன். तस्मात्–ஆகையால், कदाचन–ஒருபோதும், तनयः–பிள்ளை, आत्मा–ஆத்மாவாக, न भवेत्–ஆகமாட்டான்.

பிரீதிவைப்பதினுல் மாத்திரம் புத்திரன் எப்படி ஆத்மாவாக ஆகமுடியும்? நிலம், பண்டங்கள், பணம் முதலிய மற்றவைகளிலும் பிரீதி காணப்படுகிறது. தவிரவும் புத்திரனை விட அதிகமான பிரீதி பிராணிகளுக்கு இந்த சரீரத்தில் இருக்கிறது. வீடு தீப்பற்றி எரியும் போது புத்திரனையும் விட்டு விட்டு ஓடுகிருன். தன் தேகத்தைக் காப்பாற்றும் பொருட்டு அந்த புத்திரனை விற்று விடுகிருன். பிரதிகூலமாயிருந்தால் அவனை அடிக்கிருன் (கொல்லுகிருன்). ஆகையால் புத்திரன் ஒருநாளும் ஆத்மாவாக இருக்க முடியாது.

गुणरूपादिसादृश्यं दीपवत् न सुते पितुः ।
अव्यङ्गात् जायते व्यङ्गः सुगुणादपि दुर्गुणः ।

குணரூபாதி ஸாத்ருச்யம் தீப்வத் ந ஸுதே பிது: ।
அவ்யங்காத் ஜாயதே வ்யங்க: ஸுகுணாதபி துர்குண: ।

दीपवत्–தீபம்போல், पितुः–தந்தையின், गुणरूपादिसादृश्यं–குணம், ரூபம் முதலியவற்றின் ஸாத்ருச்யம், सुते–பிள்ளையிடம், न–காணப்படுவதில்லை. अव्यङ्गात्–அங்கஹீனமில்லாதவனிடமிருந்து, व्यङ्गः–அங்கஹீனமுள்ளவனும், सुगुणात्–நற்குணங்கள் உள்ளவனிடமிருந்து, दुर्गुणः अपि–கெட்ட குணங்கள் உள்ளவனும், जायते–பிறக்கிறான்.

தீபம் போல், பிதாவின் குணம் ரூபம் முதலானதுகளின் ஸாதிருச்யம் புத்திரனிடம் இருப்பதில்லை. அங்கஹீனமில்லாதவனிடமிருந்து அங்கஹீனமுள்ளவன் பிறக்கிறான். நல்ல குணமுள்ளவனிடமிருந்து கெட்ட குணமுள்ளவனும் பிறக்கிறான்.

आभासमात्रास्ताः सर्वा युक्तयोऽप्युक्तयोऽपि च ॥ ५३० ॥

ஆபாஸமாத்ராஸ் தாஸ் ஸர்வா யுக்தயோப்யுக்தயோபிச ॥

ताः–அந்த, सर्वाः–எல்லா, युक्तयः–யுக்திகளும், उक्तयोपि च–வசனங்களும், आभासमात्राः–ஆபாஸங்களேதான.

முன் சொன்ன அந்த எல்லா யுக்திகளும் வெறும் ஆபாஸங்களே (யுக்தியாகத்தோன்றுபவை, வாஸ்தவத்தில் யுக்திகள் இல்லை). அப்படியே தான் அந்த சுருதிவாக்கியங்களும் ஆபாஸங்கள். (530)

पुत्रस्य पितृवत् गेहे सर्वकार्येषु वस्तुषु ।
स्वामित्वद्योतनाय अस्मिन् आत्मत्वं उपचर्यते ॥ ५३१ ॥

புத்ரஸ்ய பித்ருவத் கேஹே ஸர்வகார்யேஷு வஸ்துஷு
ஸ்வாமித்வத்யோதனாயாஸ்மின் ஆத்மத்வம் உபசர்யதே ॥

गेहे-வீட்டில், पितृवत्-தகப்பனுருக்குப்போல், पुत्रस्य-புத்திரனுக்கும், सर्वकार्येषु-எல்லா காரியங்களிலும், वस्तुषु-பொருள்களிலும், स्वामित्वद्योतनाय-யஜமானத்தன்மையை குறிப்பிடுவதற்காக, अस्मिन्-இந்த புத்ரனிடத்தில், आत्मत्वं-ஆத்மாவாக இருக்கும் தன்மை, उपचर्यते-உபசாரமாகக் கூறப்படுகிறது.

வீட்டில் பிதாவைப்போலவே புத்திரனுக்கும் எல்லா கார்யங்களிலும் பதார்த்தங்களிலும் சொந்தக்காரன் என்ற தன்மையுண்டென்று காட்டுவதற்காக இவனிடத்தில் ஆத்மாவாயிருக்கும் தன்மை உபசாரமாகச் சொல்லப் படுகிறது. (531)

श्रुत्या तु मुख्यया वृत्त्या पुत्र आत्मेति नोच्यते ।
औपचारिकं आत्मत्वं पुत्रे तस्मात् न मुख्यतः ॥ ५३२ ॥

ச்ருத்யா து முக்யயா வ்ருத்த்யா புத்ர ஆத்மேதி நோச்யதே ।
ஔபசாரிகமாத்மத்வம் புத்ரே தஸ்மாத் ந முக்யத: ॥

श्रुत्या तु-வேதத்தாலோவெனில், मुख्यया वृत्त्या-முக்கிய விருத்தியால் (நேர் அர்த்தத்தில்) पुत्रः-பிள்ளை, आत्मा इति-ஆத்மாவென்று, नोच्यते-சொல்லப்படுகிறதில்லை. तस्मात्-ஆகையால் पुत्रे-புத்திரனிடத்தில், आत्मत्वं-ஆத்மத்தன்மை, औपचारिकं-உபசாரத்தால் ஏற்பட்டது न मुख्यतः-முக்யமாக இல்லை.

வேதத்திலுலோ முக்யமான விருத்தியினுல் (நேர் அர்த்த மாக) புத்திரன் ஆத்மாவென்று சொல்லப்படவில்லை. ஆகை யால் புத்திரனிடத்தில் சொல்லப்பட்ட ஆத்மத் தன்மை உபசாரமாக ஏற்பட்டதே தவிர முக்கியமாக இல்லை. (532)

(அ) இவ்விதம் மிகவும் பாமரனுயிருப்பவனுடைய அபிப்பிராயத்தைக் கண்டித்து விட்டு சார்வாகன் சொல்கிறுன்.

अहंपदप्रत्ययार्थो देह एव न चेतरः ।
प्रत्यक्षः सर्वजन्तूनां देहोऽहं इति निश्चयः ॥ ५३३ ॥

அஹம்பதப்ரத்யயார்த்தோ தேஹ ஏவ ந சேதர: ।
ப்ரத்யக்ஷ: ஸர்வஜந்தூநாம் தேஹோऽஹமிதி நிச்சய: ॥

**अहंपदप्रत्ययार्थः**–அஹம் (நான்) என்ற சொல்லிற்கும் எண்ணத்திற்கும் விஷயம், **देह एव**–தேஹம்தான், **न च इतरः**–வேறு ஒன்றும் இல்லை. **सर्वजन्तूनां**–எல்லா பிராணிகளுக்கும் **अहं देहः**–நான் சரீரம், **इति**–என்ற **निश्चयः**–உறுதி, **प्रत्यक्षः**–பிரத்யக்ஷமாக உள்ளது.

"அஹம்" (நான்) என்கிற பதத்திற்கும் எண்ணத்திற்கும் பொருள் தேகம்தான், வேறு இல்லை. ஸகல பிராணிகளுக்கும் நான் தேகம் என்கிற தீர்மானம் பிரத்யக்ஷமாயிருக்கிறது.(533)

एष पुरुषोऽन्नरसमयः इत्यपि च श्रुतिः ।
पुरुषत्वं वदत्यस्य स्वात्मा हि पुरुषः ततः ॥ ५३४ ॥
आत्माऽयं देह एवेति चर्वाकेण विनिश्चितम् ।

ஏஷ புருஷோऽந்நரஸமய இத்யபி ச ச்ருதி: ।
புருஷத்வம் வதத்யஸ்ய ஸ்வாத்மா ஹி புருஷஸ் தத: ॥
ஆத்மாऽயம் தேஹ ஏவேதி சார்வாகேண விநிச்சிதம் ।

**एषः पुरुषः**–இந்த புருஷன், **अन्नरसमयः**–அன்ன ரஸத்தின் விகாரம், **इति**–என்று, **श्रुतिरपि च**–வேதமும், **अस्य**–இந்த சரீரத்திற்கு, **पुरुषत्वं**–புருஷத்தன்மையை **वदति**–சொல்கிறது. **पुरुषः**–புருஷன், **स्वात्मा हि**–தனது ஆத்மா அல்லவா! **ततः**–ஆகையால், **अयं देह एव** இந்த சரீரம்தான், **आत्मा**–ஆத்மா, **इति**–என்று, **चार्वाकेण**–சாருவாகனால், **विनिश्चितम्**–நன்கு தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

"இந்த புருஷன் அன்ன ரஸத்தின் விகாரம்" என்று வேதமும் இந்த தேகத்திற்கு புருஷத்தன்மையைச் சொல்கிறது. புருஷன் என்பது தன் ஆத்மாதானே? ஆகையால் இந்த சரீரம்தான் ஆத்மாவென்று சார்வாகனால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது.

(அ) இந்த கொள்கையை வேறொருவன் கண்டித்து இந்திரியங்கள் தான் ஆத்மாவென்று சொல்கிறான்:—

तन्मतं दूषयत्यन्योऽसहमानः पृथग्जनः ॥ ५३५ ॥
देह आत्मा कथं नु स्यात् परतन्त्रो ह्यचेतनः ।
इन्द्रियैश्चाल्यमानोऽयं चेष्टते न स्वतः क्वचित् ॥ ५३६ ॥

*தன்மதம் தூஷயத்யன்யோऽஸஹமாந: ப்ருதக்ஜந: ॥*
*தேஹ ஆத்மா கதம் நு ஸ்யாத் பரதந்த்ரோ ஹ்யசேதந: ।*
*இந்த்ரியைச்சால்யமாநோऽயம் சேஷ்டதே ந ஸ்வத: க்வசித் ।*

**तन्मतं**-அவனுடைய கொள்கையை, **असहमानः**-பொறுக்காத, **अन्यः**-வேறு, **पृथग्जनः**-பாமர மனிதன், **दूषयति**-தூஷிக்கிறுன். **परतन्त्रः**-பிறருக்குக் கட்டுப்பட்டதும், **अचेतनः**-ஜடமாயுமுள்ள, **देहः**-சரீரம், **कथं नु आत्मा स्यात्**-எப்படி ஆத்மாவாக முடியும்? **इन्द्रियैः**-இந்திரியங்களால், **चाल्यमानः**-அசைக்கப்படுகிற, **अयं**-இந்த தேஹம், **क्वचित्**-ஒரு காலத்திலும், **स्वतः**-தாகை, **न चेष्टते**-அசைகிறதில்லை.

அந்த சார்வாகனுடைய கொள்கையை பொறுக்க மாட்டாதவனும் வேறு ஒருவன் அதை தூஷிக்கிறுன். பர தந்திரமாய் அறிவற்றிருக்கும் தேகம் எப்படி ஆத்மாவாகும்? இந்திரியங்களினால் அசைக்கப்பட்டால் தான் இது அசைகிறது. ஒருக்காலும் தாகை அசைகிறதில்லை. (536)

आश्रयः चक्षुरादीनां गृहवत् गृहमेधिनाम् ।
बाल्यादिनानावस्थावान् शुक्लशोणितसंभवः ॥ ५३७ ॥
अतः कदाऽपि देहस्य नात्मत्वं उपपद्यते ॥ ५३८ ॥

*ஆச்ரயச்சக்ஷுராதீநாம் க்ருஹவத் க்ருஹமேதிநாம் ॥*
*பால்யாதி நாநாவஸ்த்தாவான் சுக்லசோணிதஸம்பவ: ।*
*அத: கதாபி தேஹஸ்ய நாத்மத்வமுபபத்யதே ॥*

**गृहमेधिनां**-கிருஹஸ்தர்களுக்கு, **गृहवत्**-வீட்டைப்போல் **चक्षुरादीनां**-கண் முதலானவைகளுக்கு, **आश्रयः**-(தேஹம்) இருப்பிடம், **बाल्यादिनानावस्थावान्**-பால்யம் முதலான பலவித அவஸ்தைகளுடன் கூடியது, **शुक्लशोणितसंभवः**-சுக்லம்,

சோணிதம் இவைகளிலிருந்து உண்டானது. अतः-ஆகையால், कदापि-ஒருக்காலும், देहस्य-சரீரத்திற்கு, आत्मत्वं-ஆத்மத்தன்மை, न उपपद्यते-பொருந்தாது.

மேலும் இந்த தேஹம், கிருஹஸ்தர்களுக்கு வீட்டைப் போல, கண் முதலான இந்திரியங்களுக்குத் தங்குமிடமாயுள்ளது. பால்யம் முதலான பலவித பருவங்களோடு கூடியது. ரேதஸ், ரக்தம் இவைகளிலிருந்து உண்டானது. ஆகையால் தேகத்திற்கு ஆத்மத்தன்மை ஒருக்காலும் பொருந்தாது. (537-538)

बधिरोऽहं च काणोऽहं मूक इत्यनुभूतितः ।
इन्द्रियाणि भवन्त्यात्मा येषामस्त्यर्थवेदनम् ॥ ५३९ ॥

*பதிரோZஹம் ச காணோஹம் மூக இத்யநுபூதித: ।*
*இந்த்ரியாணி பவந்த்யாத்மா யேஷாமஸ்த்யர்த்தவேதநம்॥*

अहं-நான், बधिरः-செவிடன், काणः-ஒற்றைக்கண்ணன், अहं-நான், मूकः-ஊமை, इति-என்ற, अनुभूतितः-அனுபவத்தால், येषां-எவைகளுக்கு, अर्थवेदनं-வஸ்துக்களின் அறிவு, अस्ति-இருக்கிறதோ, इन्द्रियाणि-(அந்த) இந்திரியங்கள், आत्मा भवन्ति-ஆத்மாவாக ஆகின்றன.

"நான் செவிடு, நான் ஒற்றைக்கண்ணன், நான் ஊமை," என்ற அனுபவத்தினால், இந்திரியங்களுக்கு விஷயங்களின் அறிவு ஏற்படுகிறதாகத் தெரிகிறது ஆகையால் இந்திரியங்கள் தான் ஆத்மாவாகும். (539)

इन्द्रियाणां चेतनत्वं देहे प्राणाः प्रजापतिम् ।
एतमेत्येत्यूचुः इति श्रुत्यैव प्रतिपाद्यते ॥ ५४० ॥

*இந்த்ரியாணாம் சேதநத்வம் தேஹே ப்ராணா: ப்ரஜாபதிம் ।*
*ஏதமேத்யேத்யூசுரிதி ச்ருத்யைவ ப்ரதிபாத்யதே ॥*

देहे-சரீரத்தில், प्राणाः-இந்திரியங்கள், एतं-இந்த, प्रजापतिं-பிரஜாபதியை, एत्य-அடைந்து, इति-இவ்வாறு, ऊचुः-சொல்லின்று, इति-என்று, श्रुत्यैव-வேதத்தாலேயே,






इन्द्रियाणां-இந்திரியங்களுக்கு, चेतनत्वं-சேதனமாயிருக்கும் தன்மை, प्रतिपाद्यते-விளக்கப்படுகிறது.

"தேகத்தில் பிராணன்கள் (இந்திரியங்கள்) இந்த பிரஜாபதியை அடைந்து இவ்விதம் சொன்னார்கள்" என்று இந்திரியங்களுக்கு அறிவுள்ள தன்மையுண்டென்பது வேதத்திலேயே பிரதிபாதிக்கப்படுகிறது. (540)

यतः तस्मात् इन्द्रियाणां युक्तं आत्मत्वमित्यमुम् ।
निश्चयं दूषयत्यन्योऽसहमानः पृथग्जनः ॥ ५४१ ॥

யதஸ் தஸ்மாதிந்த்ரியாணாம் யுக்தமாத்மத்வமித்யமும் ।
நிச்சயம் தூஷயத்யந்யோऽஸஹமாந: ப்ருதக்ஜந: ॥

यतः-எதனால் (இப்படியோ), तस्मात्-ஆகையால், इन्द्रियाणां-இந்திரியங்களுக்கு, आत्मत्वं-ஆத்மாவாக இருக்கும் தன்மை, युक्तं-நியாயமானது, इति-என்ற, अमुं निश्चयं-இந்த தீர்மானத்தை, असहमानः-பொறுக்காத, अन्यः-வேறொரு, पृथग्जनः-பாமரமனிதன், दूषयति-தூஷிக்கிறான்.

இப்படியிருக்கும் காரணத்தினால் இந்திரியங்களுக்குத்தான் ஆத்மத்தன்மை நியாயமாகும். இவ்விதம் சொல்லும் இந்த தீர்மானத்தை ஸஹிக்காதவனாய் வேறு ஒருவன் இந்தக் கொள்கையும் பிசகு என்று தூஷித்து இந்திரியங்களை வேலை செய்யும்படிச் செய்யும் பிராணன் தான் ஆத்மாவென்று சொல்கிறான். (541)

इन्द्रियाणि कथं न्वात्मा करणानि कुठारवत् ।
करणस्य कुठारादेः चेतनत्वं न हीक्ष्यते ॥ ५४२ ॥

இந்த்ரியாணி கதம் ந்வாத்மா கரணானி குடாரவத் ।
கரணஸ்ய குடாராதே: சேதநத்வம் ந ஹீக்ஷ்யதே ॥

कुठारवत् -கோடாலிபோல், करणानि-கருவிகளாயிருக்கும் इन्द्रियाणि-இந்திரியங்கள், कथं नु आत्मा-எப்படி ஆத்மாவாக இருக்கமுடியும்? करणस्य-கருவியான, कुठारादेः-கோடாலி

முதலியவற்றிற்கு, चेतनत्वं-சேதனத்தன்மை, न हि ईक्ष्यते-காணப்படுகிறதில்லையே!

கோடாலியைப் போல் கருவியாக இருக்கும் இந்திரியங்கள் எப்படி ஆத்மாவாகும். கோடாலி முதலிய கருவிகளுக்கு சேதனத்தன்மை காணப்படவில்லையே? (542)

श्रुत्याऽधिदेवतामेव इन्द्रियेषूपचर्यते ।
न तु साक्षात् इन्द्रियाणां चेतनत्वं उदीर्यते ॥ ५४३ ॥

ச்ருத்யாऽதிதேவதாமேவ இந்த்ரியேஷூபசர்யதே ।
ந து ஸாக்ஷாதிந்த்ரியாணும சேதநத்வமுதீர்யதே ॥

श्रुत्या-வேதத்தால், अधिदेवतामेव-அதிதேவதையைத் தான், इन्द्रियेषु-இந்திரியங்களில், उपचर्यते-உபசாரமாகக் கூறப்படுகிறது. इन्द्रियाणां-இந்திரியங்களுக்கு, साक्षात् चेतनत्वं-நேராக சேதனத்தன்மை, न तु उदीर्यते-சொல்லப் படவே இல்லை.

ஒவ்வொரு இந்திரியத்திற்கும் அதிதேவதை உண்டு அவர்கள் சேதனர்கள். அந்த தேவதைகள் பேசினார்கள் என்பதைத்தான் உபசாரமாக இந்திரியங்கள் பேசின என்று வேதம் கூறுகிறது. இந்திரியங்களுக்கு நேரிடையாக சைதன்யம் உண்டு என்று வேதம் சொல்லவில்லை. (543)

अचेतनस्य दीपादेः अर्थाभासकता यथा ।
तथैव चक्षुरादीनां जडानामपि सिध्यति ॥ ५४४ ॥

அசேதநஸ்ய தீபாதேரர்த்தாபாஸகதா யதா ।
ததைவ சக்ஷுராதீநாம் ஜடாநாமபி ஸித்யதி ॥

यथा-எப்படி, अचेतनस्य ஜடமான, दीपादेः-தீபம் முதலிய வற்றிற்கு, अर्थाभासकता-வஸ்துக்களை பிரகாசப்படுத்தும் சக்தி உள்ளதோ, तथैव-அப்படியே, जडानां-ஜடமான. चक्षुरादीनामपि-கண் முதலியவற்றிற்கும், सिध्यति-(பிரகாசப் படுத்தும் தன்மை) ஸித்திக்கிறது.

அசேதனமாயிருக்கிற தீபம் முதலியவற்றிற்கு எப்படி பதார்த்தத்தை விளக்கக்கூடிய தன்மையிருக்கிறதோ, அப்படியே அசேதனமான இந்திரியங்களாகிய கண் முதலானவைகளுக்கும் பதார்த்தத்தை விளக்கக்கூடிய தன்மை இருக்கிறது. (544)

इन्द्रियाणां चेष्टयिता प्राणो यः पञ्चवृत्तिकः ।
सर्वावस्थासु अवस्थावान् सोऽयं आत्मत्वं अर्हति ।

இந்த்ரியாணாம் சேஷ்டயிதா ப்ராணோ ய:
பஞ்சவ்ருத்திக: 1
ஸர்வாவஸ்தாஸ்வவஸ்தாவான் ஸோऽயமாத்மத்வ
மர்ஹதி ॥

यः-எவன், इन्द्रियाणां चेष्टयिता-இந்திரியங்களை வேலை செய்யும்படி செய்கிறதாயும், पञ्चवृत्तिकः-காரியங்களால் ஐந்து வித நிலைகளுள்ளதாயும, सर्वावस्थासु-எல்லா அவஸ்தை களிலும், अवस्थावान्=செயல் உள்ளதாயும் இருக்கிறதோ, सः अयं प्राणः-அந்த இந்த பிராணன், आत्मत्वं अर्हति-ஆதமத் தன்மைக்குத் தகுதியுள்ளவன.

இந்திரியங்களை வேலை செய்யும்படி செய்கிறதாயும் ஐந்து வித (பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன்) காரியங்களுடையதாயும் எல்லா நிலையிலும் இருப்பதாயும் உள்ள இந்த பிராணன்தான் ஆத்மத்தன்மைக்கு உரித்தது.

अहं क्षुधावान् तृष्णावान् इत्याद्यनुभवादपि ॥ ५४५ ॥

श्रुत्या अन्योऽन्तर आत्मा प्राणमय इतीर्यते यस्मात् ।
तस्मात् प्राणस्यात्मत्वं युक्तं नो करणसंज्ञानां क्वापि ॥ ५४६ ॥

அஹம் க்ஷுதாவான் த்ருஷ்ணாவான்
இத்யாத்யனுபவாதபி ॥
ச்ருத்யாऽன்யோऽந்தர ஆத்மா ப்ராணமய இதீர்யதே
யஸ்மாத் 1
தஸ்மாத் ப்ராணஸ்யாத்மத்வம் யுக்தம் நோ
கரணஸம்ஞானாம் க்வாபி ॥

अहं-நான், क्षुधावान्-பசி உள்ளவன், तृष्णावान्-தாஹமுள்ளவன், इत्याद्यनुभवादपि-இது முதலான அனுபவத்தாலும் यस्मात्-எதனால், श्रुत्या-வேதத்தால், अन्योन्तर आत्मा प्राणमयः-உள்ளே வேறு ஆத்மா, பிராணமயன் इति ईर्यते-என்று சொல்லப்படுகிறதோ, तस्मात्-அதனாலும், प्राणस्य-பிராணனுக்கு, आत्मत्वं-ஆத்மத்தன்மை. युक्तं-யுக்தமானது, करणसंज्ञानां-கருவி என்ற பெயருள்ள இந்திரியங்களுக்கு, क्वापि-ஒருக்காலும், नो-யுக்தமில்லை.

"நான் பசியுள்ளவன், நான் தாஹமுள்ளவன்" இது முதலான அனுபவம் இருப்பதினாலும், வேதத்தில் "உள்ளே பிராணமயன் என்று வேறு ஆத்மா" என்று சொல்லப்பட்டிருக்கிற காரணத்தினாலும், பிராணனுக்குத்தான் ஆத்மத்தன்மை உசிதமாகும். கருவியென்று பெயருள்ள இந்திரியங்களுக்கு எவ்விதத்திலும் உசிதமாகாது. (545-546)

(அ) இந்தக் கொள்கையும் பிசகு, மனம்தான் ஆத்மாவென்று இன்னொருவர் வாதிக்கிறார்:—

इति निश्चयमेतस्य दूषयत्यपरो जडः ।
भवत्यात्मा कथं प्राणो वायुरेवैष आन्तरः ॥ ५४७ ॥

இதி நிச்சயமேதஸ்ய தூஷயத்யபரோ ஜட: ।
பவத்யாத்மா கதம் ப்ராணோ வாயுரேவைஷ ஆந்தர: ॥

इति-என்ற, एतस्य-இவனுடைய, निश्चयं-தீர்மானத்தை, जडः-அறிவில்லாத, अपरः-வேறு ஒருவன், दूषयति-தூஷிக்கிறான். प्राणः-பிராணன், कथं-எப்படி, आत्मा भवति-ஆத்மாவாகும்? एषः-இந்த பிராணன், आन्तरो वायुरेव-உள்ளே இருக்கும் வாயுதானே!

இவனுடைய இந்தத் தீர்மானத்தை அறிவற்ற இன்னொருவன் தூஷிக்கிறான் பிராணன் என்கிறது உள்ளேயிருக்கும் வாயுதானே, அது எப்படி ஆத்மாவாகும்? (547)

बहिर्यात्यन्तरायाति भस्त्रिकावायुवत् मुहुः ।
न हितं वाऽहितं वा स्वं अन्यत् वा वेद किंचन ॥ ५४८ ॥

*பஹிர்யாத்யந்தராயாதி பஸ்த்ரிகாவாயுவன் முஹு: ।*
*ந ஹிதம் வாऽஹிதம் வா ஸ்வம் அந்யத் வா*
*வேத கிஞ்சன ॥*

**भस्त्रिकावायुवत्**-துருத்தியிலுள்ள காற்றுப்போல, **मुहुः**-அடிக்கடி, **बहिः**-வெளியே, **याति**-செல்கிறது. **अन्तः** உள்ளே, **आयाति**-வருகிறது, **हितं वा**-நன்மையையோ, **अहितं वा**-தீங்கையோ, **स्वं**-தன்னையோ, **अन्यत् वा**-வேறு வஸ்துவையோ, **किंचन**-ஒன்றையும், **न वेद**-அறிகிறதில்லை.

**துருத்தியிலுள்ள காற்றுமாதிரி அடிக்கடி வெளியில் போகிறது, உள்ளே வருகிறது. ஹிதத்தையோ, அஹிதத்தையோ தன்னையோ, வேறு எதையோ, அறிவதில்லை. (548)**

**जडस्वभावः चपलः कर्मयुक्तश्च सर्वदा ।**
**प्राणस्य भानं मनसि स्थिते सुप्ते न दृश्यते ॥ ५४९ ॥**

*ஜடஸ்வபாவ: சபல: கர்மயுக்தச்ச ஸர்வதா ।*
*ப்ராணஸ்ய பாநம் மநஸி ஸ்திதே ஸுப்தே ந த்ருச்யதே ॥*

(பிராணன்) **जडस्वभावः**-ஜடத்தன்மையுள்ளது, **सर्वदा**-எப்பொழுதும், **चपलः**-சலிக்கிறதாயும், **कर्मयुक्तश्च**-செய்கையோடு கூடியதாயும் உள்ளது, **मनसि स्थिते**-மனம் இருக்கும் பொழுது, **प्राणस्य भानं**-பிராணனின் தோற்றம் உள்ளது, **सुप्ते**-(மனம்) தூங்கினபொழுது, **न दृश्यते**-காணப்படவில்லை

**அந்தப் பிராணன் ஜடஸ்வபாவத்தையுடையது. எப்பொழுதும் அலைந்துகொண்டிருக்கும். எக்காலத்திலும் வேலை செய்துகொண்டேயிருக்கும். பிராணன் இருக்கிறதென்று தெரிவதே மனஸ் இருக்கும்போதுதான். தூங்கும்போது அது காணப்படவில்லை. (549)**

**मनस्तु सर्वं जानाति सर्ववेदनकारणम् ।**
**यत् तस्मात् मन एवात्मा प्राणस्तु न कदाचन ॥ ५५० ॥**

*மநஸ்து ஸர்வம் ஜாநாதி ஸர்வவேதநகாரணம் ।*
*யத்தஸ்மாத் மந ஏவாத்மா ப்ராணஸ்து ந கதாசந ॥*

यस्-எந்த காரணத்தால், सर्ववेदनकारणं-எல்லாவற்றை யும் அறிவதற்குக் காரணமான, मनस्तु-மனமோவெனில், सर्वं-எல்லாவற்றையும், जानाति-அறிகிறதோ, तस्मात्-ஆகையால், मन एव आत्मा-மனம்தான் ஆத்மா, प्राणस्तु-பிராணனோவெனில், कदाचन ஒருக்காலும்; न-ஆத்மாவல்ல.

மனஸோ எல்லாவற்றையும் அறியக் காரணமாயிருந்து கொண்டு எல்லாவற்றையும் அறிகிறது என்பதினுல் மனஸ் தான் ஆத்மா. ஒருபொழுதும் பிராணன் ஆத்மாவல்ல. (550)

संकल्पवान् अहं चिन्तावान् अहं च विकल्पवान् ।
इत्याद्यनुभवात् अन्योऽन्तर आत्मा मनोमयः ॥ ५५१ ॥

इत्यादिश्रुतिसद्भावात् युक्ता मनस आत्मता ।

ஸங்கல்பவானஹம் சிந்தாவான் அஹம் ச விகல்பவான் ।
இத்யாத்யனுபவாதந்யோऽந்தர ஆத்மா மநோமய: ॥

இத்யாதி ச்ருதி ஸத்பாவாத் யுக்தா மநஸ ஆத்மதா ।

अहं-நான், संकल्पवान्-ஸங்கல்பத்தோடு கூடியவன், चिन्तावान्-சிந்தையோடு கூடியவன், अहं-நான், विकल्पवान् च-விகல்பத்தோடும் கூடியவன். इत्याद्यनुभवात्-இது முதலான அனுபவத்தாலும், अन्योऽन्तर आत्मा मनोमयः-உள்ளே வேறு ஆத்மா மநோமயன், इत्यादिश्रुतिसद्भावात्-இது முதலான சுருதி வாக்யம் இருப்பதாலும், मनसः-மனதிற்கு, आत्मता-ஆத்மத்தன்மை, युक्ता-யுக்தமானது.

"நான் ஸங்கல்பமுடையவன், நான் சிந்தையுடையவன், நான் விகல்பமுடையவன்" இது முதலிய அனுபவத்தினுலும் "உள்ளே மனோமயன் என்று வேறு ஆத்மா" இது முதலிய வேதவாக்கியங்கள் இருப்பதினுலும், மனஸிற்குத் தான் ஆத்மாவாக விருக்கும் தன்மை யுக்தமாகும்.

(அ) இதுவும் பிசகு. புத்திதான் ஆத்மாவென்று இன்னொருவன் சொல்கிறுன் ;—

**इति निश्चयमेतस्य दूषयत्यपरो जडः ॥ ५५२ ॥**

*இதி நிச்சயமேதஸ்ய தூஷயத்யபரோ ஜட:* ॥

इति-என்ற, एतस्य-இவனுடைய, निश्चयं-தீர்மானத்தை, जडः-அறிவில்லாத, अपरः-வேறு ஒருவன், दूषयति-தூஷிக்கிறான்.

இவனுடைய இந்தத் தீர்மானத்தை அறிவில்லாத மற்றொருவன் தூஷிக்கிறான். (551-552)

**कथं मनस आत्मत्वं करणस्य दृगादिवत् ।**
**कर्तृप्रयोज्यं करणं न स्वयं तु प्रवर्तते ॥ ५५३ ॥**

*கதம் மநஸ ஆத்மத்வம் கரணஸ்ய த்ருகாதிவத்।*
*கர்த்ருப்ரயோஜ்யம் கரணம் ந ஸ்வயம் து ப்ரவர்ததே* ॥

दृगादिवत्-கண் முதலியதுபோல், करणस्य-கருவியாக உள்ள, मनसः-மனதிற்கு, आत्मत्वं-ஆத்மத்தன்மை, कथं-எப்படிப்பொருந்தும்? कर्तृप्रयोज्यं-செய்கிறவனால் ஏவத்தக்க, करणं-கருவியானது, स्वयं तु-தானாகவே, न प्रवर्तते-செயல்படாது.

கண் முதலியவை போல கருவியாயிருக்கும் மனஸிற்கு ஆத்மத் தன்மை எப்படியிருக்கும்? கருவியென்பது செய்கிறவனால் பிரயோகப்படுத்தப்படுவதே தவிர அதுவாக தானே பிரவிருத்திப்பதில்லை. (553)

**मनःप्रयोक्ता यः कर्ता तस्यैवात्मत्वं अर्हति ।**
**आत्मा स्वतन्त्रः पुरुषो न प्रयोज्यः कदाचन ॥ ५५४ ॥**

*மந: ப்ரயோக்தா ய: கர்த்தா தஸ்யைவாத்மத்வமர்ஹதி।*
*ஆத்மா ஸ்வதந்த்ர: புருஷோ ந ப்ரயோஜ்ய: கதாசன* ॥

मनःप्रयोक्ता-மனதை ஏவுகிற, कर्ता-செய்கிறவன், यः-எவனோ, तस्यैव-அவனுக்குத்தான், आत्मत्वं-ஆத்மத்தன்மை, अर्हति-உசிதமானது, आत्मा-ஆத்மாவானவன், स्वतन्त्रः-

ஸ்வதந்திரனை, पुरुषः-புருஷன், कदाचन-ஒருக்காலும், न प्रयोज्यः-(பிறவற்றால்) ஏவத்தக்கவனில்லை.

மனஸை ஏவுகிற கர்த்தா (செய்கிறவன்) யாரோ, அவனுக்குத்தான் ஆத்மாவாயிருக்கும் தன்மை பொருந்தும். ஆத்மா என்பவன் ஸ்வதந்திரமான புருஷனாகத்தான் இருப்பான். ஒருக்காலும் ஏவப்படுகிறவனாகமாட்டான். (554)

अहं कर्ताऽस्मि अहं भोक्ता सुखीत्यनुभवादपि ।
बुद्धिरात्मा भवत्येव बुद्धिधर्मो ह्यहंकृतिः ॥ ५५५ ॥

*அஹம் கர்த்தாஸ்மி அஹம் போக்தா ஸுகீத்யநுபவாதபி॥*
*புத்திராத்மா பவத்யேவ புத்திதர்மோ ஹ்யஹங்க்ருதி: ॥*

अहं-நான், कर्ता-செய்கிறவனாக, अस्मि இருக்கிறேன், अहं-நான், भोक्ता-அனுபவிக்கிறவன், सुखी-ஸுகமுள்ளவன், इति-என்ற, अनुभवादपि-அனுபவத்தினாலும், बुद्धिः एव-புத்திதான், आत्मा भवति-ஆத்மாவாக ஆகிறது. अहंकृतिः-அஹங்காரம், बुद्धिधर्मो हि-புத்தியின் தர்மமல்லவா!

“நான் செய்கிறவனாயிருக்கிறேன். நான் அனுபவிக்கிறவன். நான் ஸுகத்தோடு கூடியவன்” என்ற அனுபவத்தினாலும் புத்திதான் ஆத்மா என்று ஏற்படுகிறது. “நான்” என்கிற எண்ணம் புத்தியின் தர்மமே. (555)

अन्योऽन्तर आत्मा विज्ञानमय इत्यब्रवीच्च निगमः ।
मनसोऽपि च भिन्नं विज्ञानमयं कर्तृरूपं आत्मानम् ॥ ५५६ ॥

*அந்யோऽந்தர ஆத்மா விஜ்ஞாநமய இத்யப்ரவீச்ச நிகம: ।*
*மநஸோऽபி ச பிந்நம் விஜ்ஞாநமயம் கர்த்ருருபமாத்மாநம்॥*

अन्योऽन्तर आत्मा विज्ञानमयः-உள்ளே வேறு ஆத்மா விஞ்ஞானமயன், इति-என்று, निगमश्च-வேதமும், मनसोऽपि च भिन्नं-மனதைக்காட்டிலும் வேறானதாயும், कर्तृरूपं-செய்கிற ஸ்வரூப முள்ளதுமான, विज्ञानमयं-விஞ்ஞானமயனை, आत्मानं-ஆத்மாவாக, अब्रवीत्-சொல்லியது.

"உள்ளே விக்ஞானமயன் என்று வேறு ஆத்மா" என்று வேதம் மனஸிலிருந்தும் வேறுபட்டதாக கர்த்தா (செய்கிறவன்) என்ற ஸ்வரூபமுள்ள விக்ஞானமயனை (புத்தியை) ஆத்மாவாகச் சொல்கிறது. (556)

विज्ञानं यज्ञं तनुते कर्माणि तनुतेऽपि च ।
इत्यस्य कर्तृता श्रुत्या मुखतः प्रतिपाद्यते ।
तस्मात् युक्ताऽऽत्मता बुद्धेः इति बौद्धेन निश्चितम् ॥ ५५७

*விஜ்ஞாநம் யஜ்ஞம் தனுதே கர்மாணி தநுதேऽபி ச ।*
*இத்யஸ்ய கர்த்ருதா ச்ருத்யா முகத: ப்ரதிபாத்யதே ॥*
*தஸ்மாத் யுக்தாऽऽத்மதா புத்தேரிதி பௌத்தேந நிச்சிதம் ॥*

विज्ञानं-விஞ்ஞானம், यज्ञं-யாகத்தை, तनुते-செய்கிறது. कर्माण्यपि च-கர்மாக்களையும், तनुते-செய்கிறது, इति-என்று, श्रुत्या-சுருதியால், अस्य-இந்த விஞ்ஞானமயனுக்கு, कर्तृता-செய்கிற தன்மையானது, मुखतः-நேராகவே, प्रतिपाद्यते-விளக்கப்படுகிறது. तस्मात्-ஆகையால், बुद्धेः-புத்திக்கு, आत्मता-ஆத்மத்தன்மையானது, युक्ता-உசிதமானது, इति-என்று, बौद्धेन-பௌத்தரால், निश्चितम्-தீர்மானிக்கப்பட்டு உள்ளது.

"விக்ஞானம் யக்ஞத்தைச் செய்கிறது, கர்மாக்களையும் செய்கிறது" என்று வேதத்திலேயே விக்ஞானத்திற்கு (புத்திக்கு) செய்கிறவன் என்ற தன்மை வாய்விட்டு பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் புத்திக்குத்தான் ஆத்மாவாயிருக்கும் தன்மை நியாயமாகும் என்று புத்தியைப் பற்றிச் சொல்லும் வாதியினால் தீர்மானம் செய்யப் பட்டிருக்கிறது.

[இந்த சுலோகத்தில் வேத வாக்கியத்தையும் பிரமாணமாய்ச் சொல்லியிருப்பதினால் இதில் கண்ட "பௌத்தன்" என்ற பதத்திற்கு "பௌத்த மதத்தைச் சேர்ந்தவன்" என்று அர்த்தம் செய்வது உசிதமாகாது. அந்த மதவாதி வேதத்தின் பிராமாண்யத்தையே மறுக்கிறவன். அவனைத்தான் குறிப்பிடு

கிறதென்று வைத்துக்கொண்டால், நான் சொல்வது உங்களுக்கு முக்யப்பிரமாணமான வேதப்படிக்கும் நியாயமாயிருக்கிறதென்று அவன் சொல்வதாக வைத்துக்கொள்ள வேண்டும்.] (557)

(அ) புத்திதான் ஆத்மா என்ற இந்தக் கொள்கையை பூர்வமீமாம்ஸகர்களில் பிராபாகரர் என்ற பிரிவைச் சேர்ந்தவர்களும், தார்க்கிகர்களும், கண்டித்து அக்ஞானம்தான் ஆத்மா என்று சொல்கிருர்கள் என்பதை ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துச் சொல்கிருர் :—

प्राभाकरः तार्किकश्च तावुभावप्यमर्षया ।
तन्निश्चयं दूषयतो बुद्धिरात्मा कथं न्विति ॥ ५५८ ॥

ப்ராபாகரஸ் தார்கிகச்ச தாவுபாவப்யமர்ஷயா ।
தந்நிச்சயம் தூஷயதோ புத்திராத்மா கதம் ந்விதி ॥

प्राभाकरः-ப்ராபாகரனும், तार्किकश्च-தார்கிகனும், तौ उभावपि-அவ்விருவர்களும. अमर्षया – பொறுத்துக்கொள்ளாமல, बुद्धिः-புத்தி, कथं नु आत्मा-எப்படி ஆத்மாவாகும், इति-என்று, तन्निश्चयं-அவனுடைய தீர்மானத்தை, दूषयतः-தூஷிக்கிருர்கள்.

பிராபாகரனும் தார்க்கிகனும் ஆகிய அவ்விரண்டு பேர்களும் அந்த தீர்மானத்தை ஸஹிக்காமல் புத்தி ஆத்மாவாக எப்படியிருக்கமுடியும் என்று கண்டிக்கிருர்கள். (558)

बुद्धेः अज्ञानकार्यत्वात् विनाशित्वात् प्रतिक्षणम् ।
बुद्ध्यादीनां च सर्वेषां अज्ञाने लयदर्शनात् ॥ ५५९ ॥

अज्ञोऽहं इत्यनुभवात् आस्त्रीबालादिगोचरात् ।
भवत्यज्ञानमेवात्मा न तु बुद्धिः कदाचन ॥ ५६० ॥

புத்தேரக்ஞாநகார்யத்வாத் விநாசித்வாத் ப்ரதிக்ஷணம் ।
புத்த்யாதீநாம் ச ஸர்வேஷாம் அஜ்ஞாநே லயதர்சநாத் ॥

அஜ்ஞோऽஹமித்யநுபவாத் ஆஸ்த்ரீபாலாதி கோசராத் ।
பவத்யஜ்ஞான மேவாத்மா ந து புத்தி: கதாசந ॥

बुद्धेः - புத்தி, अज्ञानकार्यत्वात् - அக்ஞானத்திலிருந்து உண்டாகியிருப்பதாலும், प्रतिक्षण-ஒவ்வொரு நிமிஷமும் विनाशित्वात् -நாசமடைவதாலும், बुध्यादीनां-புத்தி முதலான. सर्वेषां च-எல்லாவற்றிற்கும, अज्ञाने-அக்ஞானத்தில், लयदर्शनात् -லயம (நாசம்) காணப்படுவதாலும் आ स्त्रीबालादि-गोचरात् –ஸதிரீ, சிறுவன முதலியவர்வரை ஏறபடும், अहं अज्ञः- நான் அறியாதவன, इति-என்ற, अनुभवात् -அநுபவததாலும, अज्ञानमेव-அக்ஞானம்தான், आत्मा-ஆத்மா, भवति-ஆகிறது. बुद्धिः-புததி, कदाचन-ஒருக்காலும, न तु-ஆத்மாவல்ல.

புத்தி என்பது அக்ஞானத்தின் காரியமாயிருப்பதினலும், ஒவ்வொரு க்ஷணமும் நாசத்தையடைவதினலும், புத்தி முதலிய யாவற்றும் அக்ஞானத்தில் லயமடைவதினலும், ஸ்திரீ பாலன் முதலியவர் வரை யாவருக்கும் "நான் அக்ஞானமுள்ளவன்" என்ற அனுபவமிருந்துவருவதினலும் அக்ஞானம்தான் ஆத்மாவாகும். ஒருநாளும் புத்தி ஆத்மா வாகாது. (559-560)

विज्ञानमयात् अन्यं तु आनन्दमयं परं तथाऽऽत्मानम् ।
अन्योऽन्तर आत्माऽऽनन्दमय इति वदति वेदोऽपि ॥ ५६१ ॥

விஜ்ஞாநமயாதந்யம் த்வாநந்தமயம் பரம் தத்தாऽऽத்மாநம்।
அந்யோந்தர ஆத்மாऽऽநந்தமய இதி வததி வேதோऽபி ॥

अन्योऽन्तर आत्मा आनन्दमयः-உள்ளே வேறு ஆத்மா ஆனந்தமயன, इति-என்று, वेदोऽपि-வேதமும, तथा-அவ் வதமே, विज्ञानमयात् -விஞ்ஞானமயனைக்காட்டிலும, अन्यं-வேறான, परं-மேலான, आनन्दमयं-ஆனந்தமயனை, आत्मानं-ஆத்மாவாக, वदति-சொல்கிறது.

அப்படியே வேதமும் "உள்ளே ஆனந்தமயன் என்று வேறு ஆத்மா" என்று விக்ஞான மயனைத் தவிர வேருக மேலாக ஆனந்தமயனென்ற ஆத்மாவைச் சொல்கிறது. (561)

दुःखप्रत्ययशून्यत्वात् आनन्दमयता मता ।
अज्ञाने सकलं सुप्तौ बुध्यादि प्रविलीयते ॥ ५६२ ॥

दुःखिनोऽपि सुषुप्त्यादौ आनन्दमयता ततः ।

துக்கப்ரத்யயசூந்யத்வாத் ஆநந்தமயதா மதா ।
அக்ஞாநே ஸகலம் ஸுப்தௌ புத்த்யாதி ப்ரவிலீயதே ॥

துக்கிநோऽபி ஸுஷுப்த்யாதௌ ஆநந்தமயதா தத: ।

दुःखप्रत्ययशून्यत्वात् -துன்ப உணர்ச்சி இல்லாததால், आनन्दमयता-ஆனந்தமயத் தன்மை, मता-கருதப்பட்டுள்ளது, सुप्तौ-தூக்கத்தில், बुध्यादि सकलं-புத்தி முதலானவை எல்லாம், अज्ञाने-அக்ஞானத்தில, प्रविलीयते-லயம் அடைகிறது. ततः-அதனுல், दुःखिनोपि-துனபமுள்ளவனுக்கும், सुषुप्त्यादौ-தூக்கம் முதலான நிலையில், आनन्दमयता-ஆனந்த மயத்தன்மை உள்ளது.

அக்ஞானத்திற்கு துக்கமென்ற உணர்ச்சியில்லாததினுல் ஆனந்தமயத்தன்மை கருதப்படுகிறது. அக்ஞானத்தில் புத்தி முதலியது எல்லாம் தூக்க காலத்தில் நன்கு லயத்தை அடைந்துவிடுகிறது. அதினுல்தான் துக்கத்தோடு கூடினவனுக்குக்கூட நல்ல தூக்கம் மூர்ச்சை முதலிய நிலையில் ஆனந்தமயத் தன்மை ஏற்படுகிறது.

सुप्तौ किंचित् न जानामीत्यनुभूतिश्च दृश्यते ॥ ५६३ ॥

यत एवं अतो युक्ता ह्यज्ञानस्यात्मता ध्रुवम् ।

ஸுப்தௌ கிஞ்சித் ந ஜாநாமீத்யநுபூதிச்ச த்ருச்யதே ॥

யத ஏவமதோ யுக்தா ஹ்யக்ஞாநஸ்யாத்மதா த்ருவம் ।

किंचित् -ஒன்றையும், न जानामि-அறியவில்லை, इति-என்று, सुप्तौ-தூக்கத்தில், अनुभूतिश्च-அனுபவமும், दृश्यते-காணப்படுகிறது. यतः-எதனுல், एवं-இவ்வாறு உள்ளதோ, अतः-ஆகையால். अज्ञानस्य-அக்ஞானத்திற்கு, आत्मता-ஆத்மத் தன்மையானது, ध्रुवं-நிச்சயமாக, युक्ता-நியாயமானது,

நல்ல தூக்கத்தில் "நான் எதையும் அறியவில்லை" என்கிற அனுபவமும் காணப்படுகிறது. இவ்விதமிருப்பதால், அக்ஞானத்திற்குத்தான் ஆத்மத்தன்மை நிச்சயமாய்ப் பொருந்தும்.

(அ) மீமாம்ஸகர்களில் வேருெரு பிரிவைச் சேர்ந்த குமாரிலபட்டருடைய சிஷ்யர்களான பாட்டர்கள் இந்தக் கொள்கையையும் கண்டித்து ஆத்மா அக்ஞானம் மாத்திரமல்ல, ஞானம் அக்ஞானம் இரண்டும் சேர்ந்தது என்கிருர்கள் :—

इति तन्निश्चयं भाट्टा दूषयन्ति स्वयुक्तिभिः ॥ ५६४ ॥

*இதி தந்நிச்சயம் பாட்டா தூஷயந்தி ஸ்வயுக்திபி: ॥*

इति-இவ்வாருன, तन्निश्चयं-*அவர்களின் தீர்மானத்தை*, भाट्टाः-பாட்டர்கள், स्वयुक्तिभिः-*தங்களின் யுக்திகளால்*, दूषयन्ति-தூஷிக்கிருர்கள்.

இவ்விதமுள்ள அவர்களின் தீர்மானத்தை தங்கள் யுக்திகளைக் கொண்டு பாட்டர்கள் தூஷிக்கிருர்கள். (564)

कथं अज्ञानमेवात्मा ज्ञानं चाप्युपलभ्यते ।
ज्ञानाभावे कथं विद्युः अज्ञोऽहमिति चाज्ञताम् ॥ ५६५ ॥

*கதமக்ஞாநமேவாத்மா ஞாநம் சாப்யுபலப்யதே ।*
*ஞாநாபாவே கதம் வித்யுரஜ்ஞோZஹமிதி சாஜ்ஞதாம் ॥*

कथं-*எப்படி*, अज्ञानमेव-*அக்ஞானம் மட்டும்*, आत्मा-*ஆத்மாவாகும்?* ज्ञानं चापि-*ஞானமும்*, उपलभ्यते-*காணப்படுகிறதே!* ज्ञानाभावे-*ஞானமில்லாவிட்டால்*, अहं अज्ञः-*நான் அறியாதவன்*, इति-*என்று*, अज्ञतां-*அறியாத்தன்மையை*, कथं विद्युः-*எப்படி அறிவார்கள் ?*

அக்ஞானம் மாத்திரம் எப்படி ஆத்மாவாகும்? ஞானமும் காணப்படுகிறதே! ஞானம் இல்லாமல் போனுல் "நான் அறியாதவன்" என்று அறியாத்தன்மையை எப்படி அறிய முடியும்? (565)

अस्वाप्सं सुखमेवाहं न जानाम्यत्र किंचन ।
इत्यज्ञानमपि ज्ञानं प्रबुद्धेषु प्रदृश्यते ॥ ५६६ ॥

அஸ்வாப்ஸம் ஸுகமேவாஹம் ந ஜாநாம்யத்ர கிஞ்சந ।
இத்யஜ்ஞாநமபி ஞாநம் ப்ரபுத்தேஷு ப்ரத்ருச்யதே ॥

अहं-நான், सुखमेव-சுகமாகவே, अस्वाप्सम्-தூங்கினேன், अत्र-இங்கு, किंचन-ஒன்றையும், न जानामि-அறியவில்லை, इति-என்று, अज्ञानं-அக்ஞானமும், ज्ञानमपि-ஞானமும், प्रबुद्धेषु-விழித்துக்கொண்டவர்களிடம், प्रदृश्यते-காணப் படுகிறது.

"நான் ஸுகமாகவே தூங்கினேன். அப்பொழுது நான் எதையும் அறியவில்லை" என்று அக்ஞானம் ஞானம், இரண்டும் விழித்துக்கொண்டவர்களிடம் காணப்படுகிறது.

प्रज्ञानघन एवानन्दमय इत्यपि श्रुतिः ।
प्रब्रवीत्युभयात्मत्वं आत्मनः स्वयमेव हि ॥ ५६७ ॥

ப்ரஜ்ஞாநகந ஏவாநந்தமய இத்யபி ச்ருதி: ।
ப்ரப்ரவீத்யுபயாத்மத்வமாத்மந: ஸ்வயமேவ ஹி ॥

प्रज्ञानघन एव-ஞானம் நிறைந்தவன்தான், आनन्दमयः-ஆனந்தமயன், इति-என்று, श्रुतिरपि-வேதமும், स्वयमेव-தானாகவே, आत्मनः-ஆத்மாவிற்கு, उभयात्मत्वं-இருவித ஸ்வ பாவத்தை, प्रब्रवीति हि-சொல்கிறதல்லவா!

ஆனந்தமயன் ஞானகனனே என்று வேதமும் நேராகவே ஆத்மாவிற்கு அக்ஞானம், ஞானம் இரண்டு ஸ்வபாவத் தன்மையும் உண்டென்று சொல்கிறதல்லவா! (567)

आत्माऽतः चिज्जडतनुः खद्योत इव संमतः ।
न केवलाज्ञानमयो घटकुड्यादिवत् जडः ।

ஆத்மாதச்சிஜ்ஜடதநு: கத்யோத இவ ஸம்மத: ।
ந கேவலாஞாநமயோ கடகுட்யாதிவத் ஜட: ।

अतः-ஆகையால், आत्मा-ஆத்மா, खद्योत इव-மின்மினிப் பூச்சிபோல, चिज्जडतनुः-ஞானம் அக்ஞானம் என்று இரு ஸ்வபாவமுள்ளதாக, संमतः-ஒப்புக்கொள்ளப்பட்டது. घटकुड्यादिवत् -குடம், சுவறு முதலியவைபோல, जडः-ஜடமாகவும், केवलाज्ञानमयः - அக்ஞான ஸ்வரூபம் மட்டுமுள்ளதாகவும், न-இல்லை.

ஆகையால் ஆத்மா மினுமினுப் பூச்சியைப்போல (அது எப்படி பிரகாசமுள்ளதாயும் பிரகாசமில்லாததாயும் இருக்கின்றதோ அதைப்போல) ஞானம் அக்ஞானம் இரண்டையும் ஸ்வபாவமாகவுள்ளது. குடம், சுவர் முதலியன போல ஜடமாய் வெறும் அக்ஞானமயம் அல்ல.

(அ) இதுவும் பிசகு, சூன்யம்தான் ஆத்மா என்று இன்னொருவன் சொல்கிறான் :—

इति निश्चयमेतेषां दूषयत्यपरो जडः ॥ ५६८ ॥

*இதி நிச்சயமேதேஷாம் தூஷயத்யபரோ ஜட: ॥*

इति-என்ற, एतेषां-இவர்களின், निश्चयं-தீர்மானத்தை जडः- அறிவில்லாத, अपरः-வேறு ஒருவன், दूषयति-தூஷிக்கிறான்.

பாட்டர்களாகிய இவர்களின் இந்தத் தீர்மானத்தை அறிவற்ற இன்னொருவன் தூஷிக்கிறான். (568)

ज्ञानाज्ञानमयस्त्वात्मा कथं भवितुमर्हति ।
परस्परविरुद्धत्वात् तेजस्तिमिरवत् तयोः ॥ ५६९ ॥

*ஞானாஞானமயஸ்த்வாத்மா கதம் பவிதுமர்ஹதி ।*
*பரஸ்பர விருத்தத்வாத் தேஜஸ்திமிரவத் தயோ: ॥*

तेजस्तिमिरवत्-ஒளியும் இருட்டும்போல, तयोः-அந்த ஞானம் அக்ஞானம் இரண்டும், परस्परविरुद्धत्वात् -ஒன்றுக்கொன்று விரோதமுள்ளதாதலால், आत्मा-ஆத்மாவானது, कथं-எப்படி, ज्ञानाज्ञानमयः-ஞானம் அக்ஞானம் இரண்டு

ஸ்வரூபமுள்ளதாக, भवितुं-ஆவதற்கு, अर्हति-தகுந்ததாகிறது?

வெளிச்சமும் இருட்டும் போல அந்த ஞானம், அக்ஞானம் இரண்டும் ஒன்றுக்கொன்று விரோதத் தன்மையுடையவைகளாய் இருப்பதால், ஆத்மா ஞானமயனுயும் அக்ஞானமயனுயும் இருப்பது எப்படி நியாயமாகும்? (569)

सामानाधिकरण्यं वा संयोगो वा समाश्रयः ।
तमःप्रकाशवत् ज्ञानाज्ञानयोः न हि सिध्यति ॥ ५७० ॥

ஸாமாநாதிகரண்யம் வா ஸம்யோகோ வா ஸமாச்ரய: ।
தம:ப்ரகாசவத் ஞாநாஞாநயோர் ந ஹி ஸித்யதி ॥

तमःप्रकाशवत् -இருளுக்கும் ஒளிக்கும்போல, ज्ञानाज्ञानयोः-ஞானம், அக்ஞானம் இரண்டிற்கும், सामानाधिकरण्यं वा ஒரே பதார்த்தத்தைக் குறிக்கும் தன்மையாவது, संयोगो वा-சேர்க்கையாவது, समाश्रयः-ஒரே ஆச்ரயத்துடன் இருப்பதாவது, न हि सिध्यति-ஏற்படாது.

ஒரே பதார்த்தத்தைக் குறிக்கும் தன்மையாவது, ஒன்ருேடொன்று சேர்ந்திருப்பதாவது, இரண்டும் ஒரே ஆசிரயத்துடன் இருப்பதாவது, இருட்டுக்கும் பிரகாசத்திற்கும் எப்படி ஸாத்தியமில்லையோ அதைப்போலவே, ஞானத்திற்கும் அக்ஞானத்திற்கும் இவை எவ்வகையிலும் ஸாத்யப்படாது.

अज्ञानं अपि विज्ञानं बुद्धिर्वाऽपि च तद्गुणाः ।
सुषुप्तौ नोपलभ्यन्ते यत् किंचिदपि वाऽपरम् ॥ ५७१ ॥

मात्रादिलक्षणं किं तु शून्यमेवोपलभ्यते ।

அக்ஞாநமபி விஜ்ஞாநம் புத்திர்வாபி ச தத்குணா: ।
ஸுஷுப்தௌ நோபலப்யந்தே யத் கிஞ்சிதபி வாऽபரம் ॥

மாத்ராதிலக்ஷணம் கிம்து சூந்யமேவோபலப்யதே ।

सुषुप्तौ-நல்ல தூக்கத்தில், अज्ञानमपि-அக்ஞானமும், विज्ञानं-விக்ஞானமும், बुद्धिर्वापि च-புத்தியுமோ, तद्गुणाः-அதன் குணங்களோ, मात्रादिलक्षणं-ப்ரமாதா, ப்ரமேயம், ப்ரமை என்ற ஸ்வரூபமோ, यत्किंचिदपि वा अपरं-வேறு ஏதாவதோ, नोपलभ्यन्ते-காணப்படவில்லை. किं तु शून्यमेव-ஆனால் சூன்யம்தான், उपलभ्यते-காணப்படுகிறது.

நல்ல தூக்கத்தில் அக்ஞானமோ, ஞானமோ, புத்தியோ, அதன் குணங்களோ, பார்க்கிறவன், பார்வை, பார்க்கப்படும் பதார்த்தம் என்ற இவையோ வேறு எதுவோ, காணப்படவில்லை, சூன்யம்தான் காணப்படுகிறது.

सुषुप्तौ नान्यदस्त्येव नाहमप्यासमित्यनु ॥ ५७२ ॥

सुप्तोत्थितजनैः सर्वैः शून्यमेवानुस्मर्यते ।

यत् ततः शून्यमेवात्मा न ज्ञानाज्ञानलक्षणः ॥ ५७३ ॥

ஸுஷுப்தௌ நாந்யதஸ்த்யேவ நாஹமப்யாஸமித்யநு ॥

ஸுப்தோத்திதஜனை: ஸர்வை: சூந்யமேவாநுஸ்மர்யதே ।
யத் தத: சூந்யமேவாத்மா ந ஞாநாஞாநலக்ஷண: ॥

यत्-ஏதனால், सुषुप्तौ-நல்ல தூக்கத்தில், अन्यत्-வேறு பொருள், नास्त्येव-இல்லவே இல்லை, अहमपि-நானும், नासं-இல்லை, इति-என்று, अनु-பின்னால், सर्वैः-எல்லா, सुप्तोत्थितजनैः-தூங்கி எழுந்திருந்த ஜனங்களாலும், शून्यमेव-சூன்யம் தான், अनुस्मर्यते-நினைத்துக்கொள்ளப்படுகிறதோ, ततः-ஆகையால், शून्यमेव-சூன்யம்தான், आत्मा-ஆத்மா, ज्ञानाज्ञानलक्षणः-ஞானம் அக்ஞானம் இரண்டும் சேர்ந்தஸ்வரூபம், न-ஆத்மாவல்ல.

"நல்ல தூக்கத்தில் வேறு எதுவும் இல்லவேயில்லை. நானும் கூட இல்லை" என்று பின்னால் தூங்கி எழுந்திருந்த ஜனங்கள் எல்லோராலும் சூன்யம்தான் ஞாபகப்படுத்தப் படுகிறது. இவ்விதமிருப்பதினால் சூன்யம்தான் ஆத்மா,

ஞானம் அக்ஞானம் இரண்டும் சேர்ந்த ஸ்வரூபம் ஆத்மா அல்ல. (573)

वेदेनापि असदेवेदमग्र आसीत् इति स्फुटम् ।
निरुच्यते यतस्तस्मात् शून्यस्यैवात्मता मता ॥ ५७४ ॥

வேதேநாப்யஸதேவேதம் அக்ர ஆஸீதிதி ஸ்புடம் ।
நிருச்யதே யதஸ் தஸ்மாத் சூந்யஸ்யைவாத்மதா மதா ॥

यतः-எதனால், इदं-இந்த பிரபஞ்சம், अग्रे-ஸிருஷ்டிக்கு முன்னால், असदेव-இல்லாததாகவே, आसीत्-இருந்தது, इति-என்று, स्फुटं-தெளிவாக, वेदेनापि-வேதத்தாலும், निरुच्यते-விளக்கப்படுகிறதோ, तस्मात्-ஆகையால், शून्यस्यैव-சூன்யத்திற்குத்தான். आत्मता-ஆத்மத்தன்மை. मता-ஒப்புக்கொள்ளப் பட்டுள்ளது.

"இந்த ஜகத் ஸ்ருஷ்டிக்கு முன்னால் இல்லாததாகவேயிருந்தது" என்று வேதத்திலேயும் தெளிவாக விளக்கப் பட்டிருப்பதால் சூன்யத்திற்குத்தான் ஆத்மத்தன்மை ஒப்புக் கொள்ளவேண்டும். (574)

असन्नेव घटः पूर्वं जायमानः प्रदृश्यते ।
न हि कुम्भः पुरैवान्तः स्थित्वोदेति बहिर्मुखः ॥ ५७५ ॥

அஸந்நேவ கட: பூர்வம் ஜாயமாந: ப்ரத்ருச்யதே ।
ந ஹி கும்ப: புரைவாந்த: ஸ்தித்வோதேதி பஹிர்முக: ॥

पूर्वं-முன்னால், असन्-இல்லாத, घट एव-குடம்தான், जायमानः-உண்டாகிறதாக, प्रदृश्यते-காணப்படுகிறது, कुम्भः-குடம், पुरैव-முன்னாலேயே, अन्तः स्थित्वा-உள்ளே இருந்து கொண்டு, बहिर्मुखः-வெளிப்படுவதாக, नहि उदेति-கிளம்புகிறதில்லை.

முன்னால் இல்லாத குடம்தான் உண்டாவதாகக் காணப் படுகிறது. முன்னமேயே உள்ளே இருந்துகொண்டு குடம் வெளியில் கிளம்புகிறதில்லையே! (575)

यत् तस्मात् असतः सर्वं सत् इदं समजायत ।
ततः सर्वात्मना शून्यस्यैवात्मत्वं समर्हति ॥ ५७६ ॥

*யத் தஸ்மாதஸத: ஸர்வம் ஸதிதம் ஸமஜாயத ।*
*தத: ஸர்வாத்மநா சூந்யஸ்யைவாத்மத்வம் ஸமர்ஹதி ॥*

यत्-எந்த காரணத்தால், सत्-ஸத்தான, इदं सर्वं-இது எல்லாம், तस्मात्-அந்த, असतः-அஸத்திலிருந்து, समजायत-உண்டானதோ, ततः-அந்தக் காரணத்தால், सर्वात्मना-எல்லாவிதத்திலும், शून्यस्यैव-சூன்யத்திற்குத்தான் आत्मत्वं-ஆத்மத்தன்மை, समर्हति-தகுந்ததாகிறது.

இல்லாமலிருந்த அந்த சூன்யத்திலிருந்து இருக்கிற இது எல்லாம் உண்டாயிற்று என்ற காரணத்தினால் எவ்வகையாகப் பார்த்தாலும், சூன்யத்திற்குத்தான் ஆத்மாவாயிருக்கும் தன்மை பொருத்தமாயிருக்கிறது. (576)

(அ) இவ்விதமாக ஒவ்வொரு மதவாதிகளின் அபிப்பிராயத்தையும் சொல்லி அவர்களுக்குள்ளேயே ஒருவர் அபிப்பிராயத்தை மற்றவர் கண்டிப்பதாக எடுத்துக்காட்டியதிலிருந்து, எல்லாக் கொள்கைகளுமே தவறுதான் என்று ஏற்படுகிறதென்பதை ஸ்ரீமத் ஆசார்யார் தெளிவுபடுத்துகிறார் :-

इत्येवं पण्डितंमन्यैः परस्परविरोधिभिः ।
तत्तन्मतानुरूपाल्पश्रुतियुक्त्यनुभूतिभिः ॥ ५७७ ॥

निर्णीतमतजातानि खण्डितान्येव पण्डितैः ।
श्रुतिभिश्चाप्यनुभवैः बाधकैः प्रतिवादिनाम् ॥ ५७८ ॥

*இத்யேவம் பண்டிதம்மந்யை: பரஸ்பரவிரோதிபி: ।*
*தத்தன் மதாநு ரூபால்ப ச்ருதியுக்த்யநு பூதிபி: ॥*

*நிர்ணீத மத ஜாதானி கண்டிதாந்யேவ பண்டிதை: ।*
*ச்ருதிபிச்சாப்யநுபவைர் பாதகை: ப்ரதிவாதிநாம ॥*

इत्येवं-என்று இவ்விதமாக, परस्परविरोधिभिः-ஒருவருக்கொருவர் எதிரிகளான, पण्डितंमन्यैः-தங்களைப் பண்டிதர்கள்

என்று எண்ணிக்கொள்பவர்களால், तत्तन्मतानुरूप-அந்தந்த மதத்திற்கு ஒற்றுமையான, अल्प-கொஞ்சமான, श्रुतियुक्त्यनुभूतिभिः-வேதம், யுக்தி, அநுபவம் இவைகளால், निर्णीतमतजातानि-தீர்மானிக்கப்பட்ட மதஸமூஹங்கள், पण्डितैः-பண்டிதர்களால், प्रतिवादिनां-எதிர்வாதிகளுக்கு, बाधकैः-பாதகமான, श्रुतिभिश्च-ச்ருதிகளாலும், अनुभवैरपि-அநுபவங்களாலும், खण्डितान्येव-கண்டிக்கப்பட்டவைகள்தான்.

இவ்விதமாக ஒருவருக்கொருவர் விரோதிகளாயிருந்து கொண்டு தாங்களாகவே தங்களை பண்டிதர்களாக எண்ணிக் கொண்டிருப்பவர்களால் அவரவர் அபிப்பிராயத்திற்கு அனுகுணமாக அல்பமான வேத வாக்கியங்களையும், யுக்திகளையும் அனுபவங்களையும் காட்டி தீர்மானிக்கப்பட்டிருக்கிற இந்த மதக் கூட்டங்களெல்லாம் வாஸ்தவமாக பண்டிதர்களாயிருப்பவர்களால் பிரதிவாதிகளுக்கு பாதகமாயுள்ள வேதவாக்கியங்களாலும் அனுபவத்தினுலும் கண்டிக்கப்பட்டவைகளேயாகும். (577-578)

यतस्तस्मात्तु पुत्रादेः शून्यान्तस्य विशेषतः ।
सुसाधितं अनात्मत्वं श्रुतियुक्त्यनुभूतिभिः ॥ ५७९ ॥

யதஸ் தஸ்மாத்து புத்ராதே: சூந்யாந்தஸ்ய விசேஷத: ।
ஸுஸாதிதம் அநாத்மத்வம் ச்ருதியுக்த் யநுபூதிபி: ॥

यतः तस्मात्-எதனால், (கண்டிக்கப்பட்டவைகளோ) ஆகையால், पुत्रादेः-புத்திரன் முதல், शून्यान्तस्य-சூன்யம் முடிய உள்ளவற்றிற்கு, विशेषतः-விசேஷிதது, श्रुतियुक्त्यनुभूतिभिः-வேதம், யுக்தி, அனுபவம் இவைகளால், अनात्मत्वं-ஆத்மாவல்லாத தன்மை, सुसाधितम्-நன்கு ஸாதிக்கப்பட்டது.

இவ்விதமிருப்பதால் புத்திரன் முதல் சூன்யம் முடிய உள்ளவைகளுக்கும் தனித்தனியே சுருதி, யுக்தி, அனுபவம் இவைகளைக்கொண்டு அனாத்மத்(ஆத்மாவற்ற) தன்மை நன்கு ஸாதிக்கப்பட்டுவிட்டது. (579)

न हि प्रमाणान्तरबाधितस्य
याथार्थ्यं अङ्गीक्रियते महद्भिः ।
पुत्रादिशून्यान्तं अनात्मतत्त्वं
इत्येव विस्पष्टं अतः सुजातम् ॥ ५८० ॥

*நஹி ப்ரமாணாந்தர பாதிதஸ்ய*
*யாதார்த்யமங்கீக்ரியதே மஹத்பி: ।*
*புத்ராதி சூந்யாந்தம் அநாத்மதத்வம்*
*இத்யேவ விஸ்பஷ்டமத: ஸுஜாதம் ॥*

**प्रमाणान्तरबाधितस्य**-வேறு பிரமாணங்களால் பாதிக்கப் பட்டதற்கு, **याथार्थ्यं**-உண்மைத்தன்மை, **महद्भिः**-பெரியோர் களால், **नहि अङ्गीक्रियते**-ஒப்புக்கொள்ளப்படுகிறதில்லை யல்லவா! **अतः**-ஆகையால், **पुत्रादिशून्यान्तं**-புத்திரன் முதல் சூன்யம் முடிய உள்ளது, **अनात्मतत्त्वं इत्येव**-ஆத்மாவல்லாத ஸ்வரூபம் என்றே, **विस्पष्टं**-மிகத்தெளிவாக, **सुजातं**-நன்கு ஏற்பட்டது.

**வேறு பிரமாணத்தினால் பாதிக்கப்படுகிற விஷயத்திற்கு வாஸ்தவமாயிருக்கும் தன்மை பெரியோர்களால் ஒப்புக் கொள்ளப்படுவது கிடையாது என்பது பிரஸித்தம். ஆகை யால் புத்திரன் முதல் சூன்யம் வரையிலுள்ளவைகளுக்கு அனாத்மத் தன்மைதான் (ஆத்மாவாக இருக்க முடியாத தன்மைதான்) என்பது வெகு ஸ்பஷ்டமாக நன்கு ஏற்படு கிறது. (580)**

**(அ) குரு உபதேசம் செய்துகொண்டு போன முறையில் ஒவ்வொரு மதத்தையும் சொல்லி அது பிசகென்று அடுத்த மதஸ்தர் எப்படிச் சொல்கிறார் என்பதையும் படிப்படியாகவே எடுத்துச் சொல்லிக்கொண்டு வந்தார். ஆனால் கடைசியாக சூன்ய வாதத்தை சொன்னாரே தவிர அதற்கு மேலாக எவ்வித மதத்தையும் சொல்லாததினால் சூன்யவாதம் எவ்விதம் பிசகு என்று எடுத்துக்காட்டவில்லை. அப்படியிருந்தும் சூன்யவாதம் உள்பட முன் சொன்ன வாதங்கள் எல்லாம் பிசகு என்று குரு முடித்துவிட்டார். அதினால் சூன்யவாதம் எப்படிப் பிசகு**

என்று சிஷ்யன் கேள்வி கேட்பதற்கு அவசியம் ஏற்பட்டது. அதுவிஷயமாய் தனக்குள்ள ஸந்தேகத்தை நிவிருத்தி செய்து கொடுக்கும்படி குருவை பிரார்த்திக்கிறுன் :—

शिष्यः —

सुषुप्तिकाले सकले विलीने
शून्यं विना नान्यदिहोपलभ्यते ।
शून्यं त्वनात्मा न ततः परं को-
ऽप्यात्माभिधानस्त्वनुभूयतेऽर्थः ॥ ५८१ ॥

சிஷ்யன் :—

ஸுஷுப்திகாலே ஸகலே விலீநே
சூன்யம் விநா நாந்யதிஹோபலப்யதே ।
சூன்யம் த்வநாத்மா ந தத: பர: கோ-
ऽப்யாத்மாபிதாநஸ் த்வநுபூயதேऽர்த்த: ॥

सुषुप्तिकाले-நல்ல தூக்க சமயத்தில், सकले विलीने-எல்லாம் மறைந்தபின், इह-இங்கு, शून्यं विना-சூன்யத்தைத் தவிற, अन्यत्-வேறு வஸ்து, नोपलभ्यते-அறியப்படவில்லை, शून्यं तु-சூன்யமோவெனில், अनात्मा-ஆத்மா அல்ல, ततः परं-அதைக்காட்டிலும் வேருக், आत्माभिधानः-ஆத்மா என்று பெயருள்ள, कोपि अर्थः-ஒரு பொருளும். न तु अनुभूयते-அனுபவிக்கப்படவில்லையே !

நல்ல தூக்க ஸமயத்தில் எல்லாம் லயமடைந்திருக்கும் போது சூன்யத்தைவிட இங்கு வேறு எதுவும் காணப்படுகிற தில்லை. சூன்யமோ அனுத்மா என்று நீங்கள் சொல்லி விட்டீர்கள் அதற்கு வேருக ஆத்மா வென்று பெயரிடக்கூடிய தாக எவ்வித பதார்த்தமும் அனுபவிக்கப்படவில்லையே ! (581)

यद्यस्ति चात्मा किमु नोपलभ्यते
सुप्तौ यथा तिष्ठति किं प्रमाणम् ।

किंलक्षणोऽसौ स कथं न बाध्यते
प्रबाध्यमानेषु अहमादिषु स्वयम् ॥ ५८२ ॥

*யத்யஸ்தி சாத்மா கிமு நோபலப்யதே*
*ஸுப்தௌ யதா திஷ்டதி கிம் ப்ரமாணம் ।*
*கிம்லக்ஷணோऽஸௌ ஸ கதம் ந பாத்யதே*
*ப்ரபாத்யமாநேஷ்வஹமாதிஷு ஸ்வயம் ॥*

आत्मा-ஆத்மவஸ்து, यदि अस्ति-இருக்கிறதானால், किमु न उपलभ्यते-ஏன் அறியப்படவில்லை? सुप्तौ-தூக்கத்தில், यथा तिष्ठति-எப்படி இருக்கிறதோ (அதற்கு), किं प्रमाणं-என்ன பிரமாணம்? असौ-அந்த ஆத்மா, किंलक्षणः-என்ன லக்ஷணமுள்ளது? अहमादिषु-அஹங்காரம் முதலியவைகள், स्वयं-தானாக, प्रबाध्यमानेषु-பாதிக்கப்படும்பொழுது, सः-அந்த ஆத்மா, कथं न बाध्यते-எப்படி பாதிக்கப்படுகிறதில்லை?

ஆத்மா இருக்கிறதேயானால் ஏன் தெரியவில்லை? தூக்கத்தில் இருக்கிறதென்பதற்கு பிரமாணம் என்ன? என்ன லக்ஷணத்தையுடையது இந்த ஆத்மா? அஹங்காரம் முதலியதெல்லாம் பாதிக்கப்படுகிறபோது இதுமாத்திரம் என்ன காரணத்தினால் பாதிக்கப்படவில்லை? (582)

एतत् संशयजातं मे हृदयग्रन्थिलक्षणम् ।
छिन्धि युक्तिमहाखड्गधारया कृपया गुरो ॥ ५८३ ॥

*ஏதத் ஸம்சயஜாதம் மே ஹ்ருதயக்ரந்தி லக்ஷணம் ।*
*சிந்தி யுக்திமஹாகட்கதாரயா க்ருபயா குரோ ॥*

गुरो-ஹே குரோ, कृपया-தயவினால், युक्ति-யுக்தி என்னும், महाखड्गधारया-பெரிய கத்தியின் நுனியால், हृदयग्रन्थिलक्षणं-மனதின் முடிச்சுருபமான, मे-என்னுடைய, एतत्-இந்த, संशयजातं-ஸந்தேஹக் கூட்டத்தை, छिन्धि-அறுக்கவேணும்.

என்னுடைய ஹ்ருதயத்தில் முடிச்சுப்போலிருக்கும் இந்த ஸம்சய ஸமூஹத்தை யுக்தியாகிற பெரிய வாளினால், ஹே குரோ, கிருபையுடன் வெட்டிவிடுங்கள். (583)

श्रीगुरुः—

अतिसूक्ष्मतरः प्रश्नः तवायं सदृशो मतः ।
सूक्ष्मार्थदर्शनं सूक्ष्मबुद्धिष्वेव प्रदृश्यते ॥ ५८४ ॥

ஸ்ரீகுரு :—

அதிஸூக்ஷ்மதர: ப்ரச்னஸ் தவாயம் ஸத்ருசோ மத: ।
ஸூக்ஷ்மார்த்ததர்சனம் ஸூக்ஷ்மபுத்திஷ்வேவ
ப்ரத்ருச்யதே ॥

अतिसूक्ष्मतरः-மிகவும் ஸூக்ஷ்மமான, अयं प्रश्नः-இந்த கேள்வி, तव-உனக்கு, सदृशः-தகுந்ததாக, मतः-கருதப் பட்டுள்ளது, सूक्ष्मार्थदर्शनं - ஸூக்ஷ்மமான விஷயங்களைப் பார்ப்பது, सूक्ष्मबुद्धिषु एव-ஸூக்ஷ்மபுத்தி உள்ளவர்களிடம் தான், प्रदृश्यते-காணப்படுகிறது.

உன்னுடைய கேள்வி மிக மிக ஸூக்ஷ்மமானது. உனக்குத் தகுந்தபடியாகத் தெரிகிறது. ஸூக்ஷ்மமான புத்தி யுள்ளவர்களிடத்தில்தான் ஸூக்ஷ்மமான விஷயங்களின் அறிவு காணப்படுகிறது. (584)

शृणु वक्ष्यामि सकलं यद्यत् पृष्टं त्वयाऽधुना ।
रहस्यं परमं सूक्ஷ्मं ज्ञातव्यं च मुमुक्षुभिः ॥ ५८५ ॥

ச்ருணு வக்ஷ்யாமி ஸகலம் யத் யத் ப்ருஷ்டம்
த்வயாऽதுனா ।
ரஹஸ்யம் பரமம் ஸூக்ஷ்மம் ஞாதவ்யம் ச முமுக்ஷுபி: ॥

रहस्यं-ரஹஸ்யமானதும், परमं-சிறந்ததும், सूक्ष्मं-ஸூக்ஷ்மமானதும், मुमुक्षुभिः-மோக்ஷமடைய விரும்புபவர்களால், ज्ञातव्यं च-அறியத்தக்கதுமான, यत् यत्-எது வெல்லாம் अधुना-இப்பொழுது, त्वया-உன்னால், पृष्टं-கேட்கப் பட்டதோ, सकलं-எல்லாவற்றையும், वक्ष्यामि-சொல்கிறேன், शृणु-கேள்.

எது எதெல்லாம் உன்னால் இப்பொழுது கேட்கப் பட்டதோ அதையெல்லாம் சொல்கிறேன்—கேள். அது

ரஹஸ்யமானது. மிகவும் மேலானது, ஸூக்ஷ்மமானது, முமுக்ஷுக்களால் அவசியம் தெரிந்துகொள்ள வேண்டியது.

बुद्ध्यादि सकलं सुप्तौ अनुलीनं स्वकारणे ।
अव्यक्ते वटवत् बीजे तिष्ठत्यविकृतात्मना ॥ ५८६ ॥

*புத்த்யாதி ஸகலம் ஸுப்தாவநுலீநம் ஸ்வகாரணே ।*
*அவ்யக்தே வடவத் பீஜே திஷ்டத்யவிக்ருதாத்மநா ॥*

सुप्तौ-தூங்கும்பொழுது, बुद्ध्यादि-புத்தி முதலான, सकलं-எல்லாம், बीजे-விதையில், वटवत्-ஆலமரம்போல, स्वकारणे-தனக்குக்காரணமான, अव्यक्ते-அவ்யக்தத்தில், अनुलीनं-மறைந்ததாய், अविकृतात्मना-விகாரமடையாத ஸ்வரூபமாக, तिष्ठति-இருக்கிறது.

தூங்கும்போது புத்தி முதலியதெல்லாம் தன் காரணமாகிய அவ்யக்தத்தில் அடங்கி, ஆலமரம் விதையில் இருப்பது போல, மாறுதலடையாத ஸ்வரூபத்துடன் இருந்து வருகிறது. (586)

तिष्ठत्येव स्वरूपेण न तु शून्यायते जगत् ।
क्वचित् अंकुररूपेण क्वचित् बीजात्मना वटः ।
कार्यकारणरूपेण यथा तिष्ठत्यदस्तथा ॥ ५८७ ॥

*திஷ்டத்யேவ ஸ்வரூபேண நது சூந்யாயதே ஜகத் ।*
*க்வசிதங்குரரூபேண க்வசித் பீஜாத்மநா வட: ।*
*கார்யகாரணரூபேண யதா திஷ்டத்யதஸ் ததா ॥*

जगत्-பிரபஞ்சம், स्वरूपेण-ஸ்வரூபத்துடன், तिष्ठत्येव-கட்டாயம் இருக்கிறது, न तु शून्यायते-சூன்யமாக ஆகிறதில்லை, यथा-எப்படி, वटः-ஆலமரம், क्वचित्-ஒரு சமயம், अंकुररूपेण-முளைரூபமாயும், क्वचित्-ஒரு சமயம், बीजात्मना-விதை ரூபமாயும், कार्यकारणरूपेण-காரியமாகவும் காரணமாகவும், तिष्ठति-இருக்கிறதோ, तथा-அப்படியே, अदः-அந்த ஜகத்தும் இருக்கிறது.

ஸ்வரூபத்துடன் ஜகத் இருக்கவே இருக்கிறது. சூன்ய மாக ஆகிவிடுகிறதில்லை. ஆலமரம் ஒருஸமயம் முளை ரூப மாயும் ஒருஸமயம் விதை ரூபமாயும், அதாவது கார்ய ரூப மாயும் காரண ரூபமாயும், எப்படி இருக்கிறதோ, அப்படியே இந்த ஜகத்தும் இருக்கிறது. (587)

अव्याकृतात्मनाऽवस्थां जगतो वदति श्रुतिः ।
सुषुप्त्यादिषु तद्वेदं तर्ह्यव्याकृतमित्यपि ॥ ५८८ ॥

அவ்யாக்ருதாத்மநாऽவஸ்தாம் ஜகதோ வததி ச்ருதி: ।
ஸுஷுப்த்யாதிஷு தத்வேதம் தர்ஹ்யவ்யாக்ருத
மித்யபி ॥

सुषुप्त्यादिषु-தூக்கம் முதலிய அவஸ்தைகளில், जगतः-பிரபஞ்சத்திற்கு, अव्याकृतात्मना – அவ்யாக்ருதஸ்வரூபமாக, अवस्थां-இருக்கும் நிலையை, 'तर्हि-அப்பொழுது, तत् इदं-அந்த இந்த ஜகத், अव्याकृतं ह (आसीत्)-அவ்யாக்ருதமாக வல்லவா (இருந்தது)', इति-என்ற, श्रुतिरपि-வேதமும், वदति-சொல்கிறது.

ஜகத் ஸுஷுப்தி (பிரளயம்) முதலிய காலங்களில் அவியாகிருத ஸ்வரூபத்துடன் இருக்கும் நிலையை "அப் பொழுது இது அவ்யாகிருதமாயிருந்தது" என்று சுருதியும் சொல்கிறது. (588)

इममर्थं अविज्ञाय निर्णीतं श्रुतियुक्तिभिः ।
जगतो दर्शनं शून्यं इति प्राहुः अतद्विदः ॥ ५८९ ॥

இமமர்த்தமவிஜ்ஞாய நிர்ணீதம் ச்ருதி யுக்திபி: ।
ஜகதோ தர்சனம் சூன்யமிதி ப்ராஹு ரதத்வித: ॥

श्रुतियुक्तिभिः-சுருதியாலும் யுக்திகளாலும், निर्णीतं-தீர்மானிக்கப்பட்ட, इमं अर्थं-இந்த விஷயத்தை, अविज्ञाय-அறிந்துகொள்ளாமல், जगतो दर्शनं-பிரபஞ்சத்தின் தத்வம், शून्यं-சூன்யம், इति-என்று, अतद्विदः-அதை அறியாதவர்கள், प्राहुः-சொல்கிறார்கள்.

சுருதியினுலும் யுக்தியினுலும் தீர்மானிக்கப்பட்டிருக்கிற இந்த விஷயத்தை அறிந்துகொள்ளாமல் "ஜகத்தின் தத்வம் சூன்யம்" என்று அதை யறியாதவர்கள் சொல்கிருர்கள்.

नासतः सत उत्पत्तिः श्रूयते न च दृश्यते ।
उदेति नरशृङ्गात्किं खपुष्पात्किं भविष्यति ॥ ५९० ॥

*நாஸத: ஸத உத்பத்தி: ச்ருயதே ந ச த்ருச்யதே ।*
*உதேதி நரச்ருங்காத் கிம் கபுஷ்பாத் கிம் பவிஷ்யதி ॥*

असतः-இல்லாததிலிருந்து, सतः-இருக்கும் பொருளுக்கு, उत्पत्तिः-உத்பத்தி, न श्रूयते-கேட்கப்படுகிறதில்லை, न च दृश्यते-காணப்படுகிறதுமில்லை, नरशृङ्गात्-மனிதன் கொம்பிலிருந்து, किं उदेति-எது உண்டாகிறது? खपुष्पात्-ஆகாயமலரி லிருந்து, किं भविष्यति-என்ன உண்டாகும?

இல்லாத பதார்த்தத்திலிருந்து இருக்கிற பதார்த்தம் உண்டாவதாக கேள்விப்படுவதும் கிடையாது, பார்க்கப் படுவதும் கிடையாது. இல்லாத மனிதக்கொம்பிலிருந்து எது உண்டாகும்? இல்லாத ஆகாச புஷ்பத்திலிருந்து எது உண்டாகும்? (590)

प्रभवति न हि कुम्भोऽविद्यमानो मृदश्चेत्
प्रभवतु सिकताया वाऽथवा वारिणो वा ।
न हि भवति च ताभ्यां सर्वथा क्वापि तस्मात्
यत उदयति योऽर्थोऽस्त्यत्र तस्य स्वभावः ॥ ५९१ ॥

*ப்ரபவதி ந ஹி கும்போऽவித்யமானோ ம்ருதச்சேத்*
*ப்ரபவது ஸிகதாயா வாऽதவா வாரிணோ வா ।*
*நஹி பவதி ச தாப்யாம் ஸர்வதா க்வாபி தஸ்மாத்*
*யத உதயதி யோऽர்த்தோऽஸ்த்யத்ர தஸ்ய ஸ்வபாவ:॥*

अविद्यमानः-இல்லாத, कुम्भः-குடம், मृदः-மண்ணிலிருந்து न हि प्रभवति-உண்டாகிறதில்லையல்லவா, चेत्-உண்டாகு மாணுல், सिकताया वा-மணலிலிருந்தோ, अथवा-அல்லது, वारिणो वा-தண்ணீரிலிருந்தோ, प्रभवतु-உண்டாகட்டும்,

क्वापि-ஒருக்காலும், सर्वथा-எவ்விதத்திலும், ताभ्यां-அந்த மணல், ஜலம் இவற்றிலிருந்து, न हि भवति-உண்டாகிறதில்லை, तस्मात्-ஆகையால், यः अर्थः-எந்த பொருள், यतः-எதிலிருந்து, उद्भयति-உண்டாகிறதோ, तस्य-அதன், स्वभावः-ஸ்வபாவம், अत्र-இங்கு, अस्ति-இருக்கிறது.

இல்லவேயில்லாத குடமானது மண்ணிலிருந்து உண்டாகாது. அவ்விதம் உண்டாகுமேயானால், மணலிலிருந்தோ அல்லது ஜலத்திலிருந்தோ உண்டாகட்டுமே? அவ்விரண்டிலிருந்தும் (மணலிலிருந்தோ, ஜலத்திலிருந்தோ) எவ்விதத்திலும் எப்பொழுதும் உண்டாவதே கிடையாது ஆகையால் எந்த பதார்த்தம் எதிலிருந்து வெளிவருகிறதோ அதில் அதன் ஸ்வபாவம் இருந்தே தீரும். (591)

अन्यथा विपरीतं स्यात्कार्यकारणलक्षणम् ।
नियतं सर्वशास्त्रेषु सर्वलोकेषु सर्वतः ॥ ५९२ ॥

அந்யதா விபரீதம் ஸ்யாத் கார்யகாரணலக்ஷணம் ।
நியதம் ஸர்வசாஸ்த்ரேஷு ஸர்வலோகேஷு ஸர்வத: ॥

अन्यथा - அப்படியில்லாவிடில், सर्वशास्त्रेषु - எல்லா சாஸ்திரங்களிலும், सर्वलोकेषु-எல்லா உலக வியவஹாரங்களிலும், सर्वतः-எல்லா விதத்திலும், नियतं-உறுதிப்பாடு அமைந்த, कार्यकारणलक्षणं-கார்யம காரணம் இவற்றின் லக்ஷணம், विपरीतं स्यात्-விபரீதமாகிவிடும்.

அப்படியில்லையானால், எல்லா சாஸ்திரங்களிலும், எல்லா உலக வியவஹாரங்களிலும், தீர்மானமாயுள்ள கார்யம் காரணம் இவைகளின் லக்ஷணம் விபரீதமாகிவிடும். (592)

कथमसतः सज्जायेतेति श्रुत्या निषिध्यते, तस्मात् ।
असतः सज्जननं नो घटते मिथ्यैव शून्यशब्दार्थः ॥ ५९३ ॥

கதமஸத: ஸஜ்ஜாயேதேதி ச்ருத்யா நிஷித்த்யதே
தஸ்மாத் ।
அஸத: ஸஜ்ஜனனம் நோ கடதே மித்யைவ சூந்ய
சப்தார்த்த: ॥

असतः-இல்லாததிலிருந்து, सत्-இருப்பது, कथं-எப்படி, जायेत-உண்டாகும், इति-என்று, श्रुत्या-வேதத்தால், निषिध्यते-நிஷேதிக்கப்படுகிறது. तस्मात्-ஆகையால், असतः-அஸத்திலிருந்து, सज्जननं-ஸத் உண்டாவது, नो घटते-பொருந்தாது, शून्यशब्दार्थः-சூன்யபதத்தின் பொருள், मिथ्यैव-பொய்தான்.

"இருக்கிற பதார்த்தம் இல்லாததிலிருந்து எப்படி உண்டாகும்?" என்று வேதத்திலேயே தடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் இல்லாததிலிருந்து இருப்பதின் உத்பத்தி பொருந்தாது. சூன்யம் என்கிற சப்தத்தின் பொருள் பொய்தான். (593)

अव्यक्तशब्दिते प्राज्ञे सत्यात्मनि अत्र जाग्रति ।
कथं सिध्यति शून्यत्वं तस्य भ्रान्तशिरोमणे ॥ ५९४ ॥

அவ்யக்தசப்திதே ப்ராஜ்ஞே ஸத்யாத்மந்யத்ர ஜாக்ரதி ।
கதம் ஸித்யதி சூன்யத்வம் தஸ்ய ப்ராந்த சிரோமணே ॥

भ्रान्तशिरोमणे-ப்ராந்தர்களுள் தலைசிறந்தவனே, अव्यक्तशब्दिते-அவ்யக்தம் என்று பெயருள்ள, प्राज्ञे-ப்ராக்ஞனை, आत्मनि-ஆத்மா, अत्र-இங்கு, जाग्रति सति-விழித்துக் கொண்டிருக்கும் பொழுது, तस्य-அவனுக்கு, शून्यत्वं-இல்லாத் தன்மை, कथं सिध्यति-எப்படி ஏற்படும்?

ஏ ப்ராந்தர்களுக்குள் தலைசிறந்தவனே, அவ்யக்தம் என்ற பெயருடைய பிராக்ஞனை ஆத்மா இங்கே விழித்துக்கொண்டிருக்கும்போது, அவனுக்கு சூன்யத்தன்மை எப்படி ஸித்திக்கும்?

[இங்கே 'பிராந்த சிரோமணியே' என்பது சூன்யவாதியைப் பார்த்தே தவிர, சிஷ்யனைப் பார்த்து என்று நினைத்துவிடக்கூடாது]. (594)

सुषुप्तौ शून्यमेवेति केन पुंसा तवेरितम् ।
हेतुनाऽनुमितं केन कथं ज्ञातं त्वयोच्यताम् ।
इति पृष्टो मूढतमो वदिष्यति किमुत्तरम् ॥ ५९५ ॥

ஸுஷுப்தௌ சூன்யமேவேதி கேந பும்ஸா தவேரிதம் ।
கேந வா ஹேதுநாऽநுமிதம் கதம் ஞாதம் த்வயோச்யதாம் ।
இதி ப்ருஷ்டோ மூடதமோ வதிஷ்யதி கிமுத்தரம் ॥

सुषुप्तौ-நல்ல தூக்கத்தில், शून्यमेवेति-சூன்யம் தான் என்று, केन पुंसा-எந்த மனிதனால், तव-உனக்கு, ईरितम्-சொல்லப்பட்டது? केन हेतुना-எந்தக்காரணத்தால், अनुमितं-ஊஹிக்கப்பட்டது. त्वया-உன்னால், कथं-எப்படி, ज्ञातं-அறிந்துகொள்ளப்பட்டது? उच्यतां-சொல்லப்படட்டும். इति-என்று, पृष्टः-கேட்கப்பட்ட, मूढतमः-மூடர்களுள் மேலானவன், किं उत्तरं-என்ன பதிலை, वदिष्यति-சொல்லப் போகிறான்,

"ஸுஷுப்தியில் சூன்யம்தான் இருக்கிறதென்று எந்தப் புருஷனால் உனக்குச் சொல்லப்பட்டது? அல்லது எந்த காரணத்தைக்கொண்டு அனுமானம் செய்தாய்? உன்னால் இவ்விஷயம் எப்படி அறியப்பட்டது? சொல்" என்று கேட்டால் இந்த மூட சிரேஷ்டன் என்ன பதில் சொல்வான்?

नैवानुरूपकं लिङ्गं वक्ता वा नास्ति कश्चन ।
सुषुप्तिस्थितशून्यस्य बोद्धा को न्वात्मनः परः ॥ ५९६ ॥

நைவாநுரூபகம் லிங்கம் வக்தா வா நாஸ்தி கச்சன ।
ஸுஷுப்திஸ்தித சூந்யஸ்ய போத்தா கோ ந்வாத்மந: பர:॥

सुषुप्तिस्थितशून्यस्य-ஸுஷுப்தியில் உள்ள சூன்யத்திற்கு, अनुरूपकं-தகுந்ததான, लिङ्गं-அடையாளம், नैव-இல்லவே யில்லை. वक्ता वा-சொல்கிறவனோ, कश्चन-ஒருவனும், नास्ति-இல்லை. बोद्धा-இதை அறிகிறவன், आत्मनः-ஆத்மாவைக் காட்டிலும், परः कोनु-வேறு யார்?

ஸுஷுப்தியில் இருக்கும் சூன்யத்தை நிரூபணம் செய்வதற்கு லிங்கம் (அடையாளம்) இல்லவே இல்லை. அதைச் சொல்லக்கூடியவனும் யாரும் கிடையாது. இந்த சூன்யத்தை அறிகிறவன் ஆத்மாவைத்தவிர வேறு யார்? (596)

स्वेनानुभूतं स्वयमेव वक्ति स्वसुप्तिकाले स्थितशून्यभावम् ।
तत्र स्वसत्तामनवेक्ष्य मूढः स्वस्यापि शून्यत्वमयं ब्रवीति ॥

ஸ்வேநாநுபூதம் ஸ்வயமேவ வக்தி
ஸ்வஸுப்திகாலே ஸ்தித சூந்யபாவம் ।
தத்ர ஸ்வஸத்தாம் அநவேக்ஷ்ய மூட:
ஸ்வஸ்யாபி சூன்யத்வமயம் ப்ரவீதி ॥

स्वेन-தன்னால், अनुभूतं-அனுபவிக்கப்பட்ட, स्वसुप्तिकाले-தன்னுடைய தூக்க ஸமயத்தில், स्थितशून्यभावं - இருந்த சூன்யத்தன்மையை, स्वयमेव-தானே, वक्ति-சொல்கிறான், तत्र-அங்கே, स्वसत्तां-தன் இருப்பை, अनवेक्ष्य-கவனிக்காமல் अयं मूढः-இந்த மூடன், स्वस्यापि-தனக்கும், शून्यत्वं-சூன்யத் தன்மையை, ब्रवीति-சொல்கிறான்.

தன்னுடைய தூக்க ஸமயத்தில் தன்னாலேயே அனுபவிக்கப்பட்ட அப்பொழுது இருந்த சூன்யத்தன்மையை தானே சொல்கிறான். அப்பொழுது தன்னுடைய இருப்பை கவனிக்காமல் இந்த மூடன் தனக்குக்கூட சூன்யத்தன்மையை சொல்கிறான். (597)

अवेद्यमानः स्वयमन्यलोकैः सौषुप्तिकं धर्ममवैति साक्षात् ।
बुद्ध्याद्यभावस्य च योऽत्र बोद्धा स एष आत्मा खलु निर्विकारः ॥

அவேத்யமாந: ஸ்வயமந்யலோகை:
ஸௌஷுப்திகம் தர்மமவைதி ஸாக்ஷாத் ।
புத்த்யாத்யபாவஸ்ய ச யோऽத்ர போத்தா
ஸ ஏஷ ஆத்மா கலு நிர்விகார: ॥

यः-எவன், अन्यलोकैः-பிறவற்றால், अवेद्यमानः-அறியப் படாதவனாய், स्वयं-தானே, साक्षात्-நேராக, सौषुप्तिकं धर्मं-ஸுஷுப்தியிலுள்ள விஷயத்தை, अवैति-அறிகிறானோ (எவன்), अत्र-இங்கே, बुद्ध्याद्यभावस्य च-புத்தி முதலியவை களின் இல்லாமையையும், बोद्धा-அறிகிறவனோ, सः एषः-அந்த

இவன், **निर्विकारः**-விகாரமில்லாத, **आत्मा खलु**-ஆத்மா அல்லவா!

எவன் வேறு யாராலும் அறியப்படாமல் தானே நேரில் ஸுஷுப்தியின் நிலையை அறிகிருனே, இந்த ஸுஷுப்தியில் புத்தி முதலியவற்றின் இல்லாமையையும் எவன் அறிகிருனே, அந்த மாறுதலற்றவன்தான் இந்த ஆத்மா அல்லவா? (598)

**यस्येदं सकलं विभाति महसा तस्य स्वयंज्योतिषः**
**सूर्यस्येव किमस्ति भासकमिह प्रज्ञादि सर्वं जडम् ।**
**न ह्यर्कस्य विभासकं क्षितितले दृष्टं तथैवात्मनो**
**नान्यः कोऽप्यनुभासकोऽनुभविता नातः परः कश्चन ॥ ५९९ ॥**

யஸ்யேதம் ஸகலம் விபாதி மஹஸா தஸ்ய ஸ்வயம்
ஜ்யோதிஷ:
ஸூர்யஸ்யேவ கிமஸ்தி பாஸகமிஹ ப்ரஜ்ஞாதி
ஸர்வம் ஜடம் ।
ந ஹ்யர்கஸ்ய விபாஸகம் க்ஷிதிதலே த்ருஷ்டம்
ததைவாத்மனோ
நாந்ய: கோऽப்யநுபாஸகோऽநுபவிதா நாத: பர: கச்சன॥

**यस्य**-எதனுடைய, **महसा**-தேஜஸ்ஸால், **इदं सकलं**-இந்த பிரபஞ்சம் எல்லாம், **विभाति**-விளங்குகிறதோ, **सूर्यस्येव**-ஸூர்யனைப்போல், **स्वयं ज्योतिषः** - தானே பிரகாசிக்கிற, **तस्य**-அந்த வஸ்துவை, **भासकं**-விளக்கக்கூடியது, **इह**-இங்கு **किमस्ति**- என்ன இருக்கிறது? **प्रज्ञादि** - புத்தி முதலானது, **सर्वं**-எல்லாம், **जडं**-ஜடமானது, **अर्कस्य विभासकं**-ஸூரியனை பிரகாசப்படுத்துகிற வஸ்து, **क्षितितले**-பூதலத்தில், **नहि दृष्टं**-பார்க்கப்பட்டதில்லையல்லவா? **तथैव**-அப்படியே, **आत्मनः**-ஆத்மாவை, **अनुभासकः**-விளங்கவைக்கிற, **अन्यः कोपि**-வேறு ஒன்றும், **न**-இல்லை, **अतः**-இந்த ஆத்மாவைக்காட்டிலும், **परः**-வேறு, **अनुभविता**-அனுபவிக்கிறவன், **कश्चन**-ஒருவரும், **न**-இல்லை.

எதனுடைய தேஜஸினால் இந்த பிரபஞ்சமெல்லாம் பிரகாசிக்கிறதோ, ஸூர்யனைப்போல் ஸ்வயம் பிரகாசமான அந்த வஸ்துவை, பிரகாசப்படுத்தக்கூடியது இங்கு வேறு உண்டா? புத்தி முதலானது எல்லாம் ஜடம். ஸூர்யனை பிரகாசப்படுத்தக்கூடியதாக பூமியில் எதுவும் காணப்படவில்லை. அப்படியே, ஆத்மாவை பிரகாசப்படுத்தக்கூடிய வேறு எதுவும் கிடையாது. அதைத்தவிர அனுபவிப்பவனும் வேறு கிடையாது. (599)

येनानुभूयते सर्वं जाग्रत्स्वप्नसुषुप्तिषु ।
विज्ञातारमिमं को नु कथं वेदितुमर्हति ॥ ६०० ॥

*யேநாநுபூயதே ஸர்வம் ஜாக்ரத்ஸ்வப்ன ஸுஷுப்திஷு ।*
*விஜ்ஞாதாரமிமம் கோ நு கதம் வேதிதுமர்ஹதி ॥*

येन-எவரால், जाग्रत्स्वप्नसुषुप्तिषु-ஜாக்ரத் ஸ்வப்னம், ஸுஷுப்தி இவைகளில், सर्वं-எல்லாம், अनुभूयते-அனுபவிக்கப்படுகிறதோ, इमं-இந்த, विज्ञातारं-அறிகிறவரை कोनु-எவன் தான், कथं-எப்படி, वेदितुं-அறிவதற்கு, अर्हति-தக்கவனாகிறான்?

எவரால் ஜாக்கிரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி, இந்த நிலைகளில் எல்லாம் அனுபவிக்கப்படுகிறதோ, இந்த அறிவுள்ளவரை யார்தான் எப்படித்தான் அறியமுடியும்? (600)

सर्वस्य दाहको वह्निर्वह्नेर्नान्योऽस्ति दाहकः ।
यथा तथाऽऽत्मनो ज्ञातुर्ज्ञाता कोऽपि न दृश्यते ॥ ६०१ ॥

*ஸர்வஸ்ய தாஹகோ வஹ்நிர் வஹ்நேர் நாந்யோऽஸ்தி தாஹக: ।*
*யதா ததாऽऽத்மநோ ஞாதுர் ஞாதா கோऽபி ந த்ருச்யதே ॥*

यथा-எப்படி, वह्निः-நெருப்பு, सर्वस्य दाहकः-எல்லாவற்றையும் எரிக்கிறதாக உள்ளது, वह्नेः-நெருப்பை, दाहकः-எரிக்கிறதாக, अन्यः-வேறு வஸ்து, नास्ति-இல்லையோ, तथा-அப்படியே, ज्ञातुः-அறிகிற, आत्मनो ज्ञाता-ஆத்மாவை அறிகிறவன், कोपि-ஒருவனும், न दृश्यते-காணப்படவில்லை.

எப்படி எல்லாவற்றையும் எரிப்பது அக்னி, அக்னியை எரிக்கக்கூடியதாக வேறு எதுவும் கிடையாதோ, அப்படியே எல்லாவற்றையும் அறிகிற ஆத்மாவை அறிகிறவனாக உள்ள வன் யாரும் காணப்படவில்லை. (601)

उपलभ्येत केनायं ह्युपलब्धा स्वयं ततः ।
उपलब्ध्रन्तराभावात् नायमात्मोपलभ्यते ॥ ६०२ ॥

உபலப்யேத கேநாயம் ஹ்யுபலப்தா ஸ்வயம் தத: ।
உபலப்த்ரந்தராபாவாத் நாயமாத்மோபலப்யதே ॥

स्वयं - தானே, उपलब्धा - அறிகிறவனான, अयं - இந்த ஆத்மா, केन-யாரால், उपलभ्येत-அறியப்படுவான்? ततः- ஆகையால், उपलब्ध्रन्तराभावात्-வேறு அறிகிறவன் இல்லாத தால், अयं आत्मा-இந்த ஆத்மா, नोपलभ्यते - அறியப் படவில்லை.

தானே அறிகிறவனாயிருந்துகொண்டிருக்கிற இவர் யாரால் அறியப்படமுடியும்? ஆகையால் அறிகிறவன் வேறு இல்லாததினால் இந்த ஆத்மா அறியப்படுகிறதில்லை. (602)

बुद्ध्यादिवेद्यविलयात् अयमेक एव
सुप्तौ न पश्यति शृणोति न वेत्ति किंचित् ।
सौषुप्तिकस्य तमसः स्वयमेव साक्षी
भूत्वाऽत्र तिष्ठति सुखेन च निर्विकल्पः ॥ ६०३ ॥

புத்யாதிவேத்யவிலயாத் அயமேக ஏவ
ஸுப்தௌ ந பச்யதி ச்ருணோதி நவேத்தி கிஞ்சித்।
ஸௌஷுப்திகஸ்ய தமஸ: ஸ்வயமேவ ஸாக்ஷீ
பூத்வாத்ர திஷ்டதி ஸுகேந ச நிர்விகல்ப: ॥

सुप्तौ-தூக்கத்தில், बुद्ध्यादिवेद्यविलयात्-புத்தி முதலான அறியப்படும வஸ்துக்கள் மறைந்துவிட்டதால், अयं-இந்த ஆத்மா, एक एव-ஒருவனாகவே இருந்துகொண்டு, किंचित्- ஒன்றையும், न पश्यति - பார்க்கிறதில்லை, न शृणोति -

கேட்கிறதில்லை, न वेत्ति-அறிகிறதில்லை, सौषुप्तिकस्य-ஸுஷுப்தியிலுள்ள, तमसः-அக்ஞானத்தை, स्वयमेव-தானே साक्षी भूत्वा-நேரில் பார்க்கிறவனாக இருந்து கொண்டு, अत्र-இந்த தூக்கத்தில், निर्विकल्पः-விகல்பமில்லாதவனாக, सुखेन च-ஸுகமாகவும், तिष्ठति-இருக்கிருன்.

தூக்கத்தில் புத்தி முதலான அறியப்படும் வஸ்துக்கள் லயமாகிவிட்டபடியால் இவர் ஒருவரே இருக்கிருர். எதையும் பார்ப்பதில்லை, கேட்பதும் இல்லை, அறிவதும் இல்லை, ஸுஷுப்தி காலத்திலுள்ள அக்ஞானத்தை தானே ஸாக்ஷியாக இருந்து பார்த்துக்கொண்டு, ஸுகமாய் எவ்வித விகல்பமுமன்னியில் இருக்கிருர். (603)

सुषुप्तौ आत्मसद्भावे प्रमाणं पण्डितोत्तमाः ।
विदुः स्वप्रत्यभिज्ञानं आबालवृद्धसंमतम् ॥ ६०४ ॥

ஸுஷுப்தாவாத்மஸத்பாவே ப்ரமாணம் பண்டிதோத்தமா: ।
விது: ஸ்வப்ரத்யபிஜ்ஞானம் ஆபாலவ்ருத்த ஸம்மதம் ॥

सुषुप्तौ-ஸுஷுபதியில், आत्मसद्भावे-ஆத்மா இருக்கும் விஷயத்தில, पण्डितोत्तमाः-சிறந்த பண்டிதாகள், आबालवृद्ध-संमतं-பாலர் முதல் விருத்தர் வரை யாவராலும ஒப்புக் கொள்ளப்பட்ட, स्वप्रत्यभिज्ञानं-தனது அனுபவத்தின் ஞாபகத்தை, प्रमाणं-பிரமாணமாக, विदुः-அறிகிருர்கள்.

ஸுஷுப்தியில் ஆத்மா இருக்கிருர் என்ற விஷயத்தில், பாலர் விருத்தர் உள்பட எல்லாராலும், ஒப்புக்கொள்ளப்படும் தன் ஞாபகத்தை பிரமாணமாக பண்டித சிரேஷ்டர்கள் அறிந்திருக்கிருர்கள். (604)

प्रत्यभिज्ञायमानत्वं लिङ्गं अत्रानुमापकम् ।
स्मर्यमाणस्य सद्भावे सुखमस्वाप्सं इत्ययम् ॥ ६०५ ॥

ப்ரத்யபிஜ்ஞாயமானத்வம் லிங்கமத்ராநுமாபகம் ।
ஸ்மர்யமாணஸ்ய ஸத்பாவே ஸுகமஸ்வாப்ஸமித்யயம் ॥

अत्र-இங்கு, सुखमस्वाप्सं-நான் நன்ருகத் தூங்கினேன், इति-என்று, स्मर्यमाणस्य-நினைக்கப்படுகிற ஆத்மாவின், सद्भावे-இருப்பில், प्रत्यभिज्ञायमानत्वं-நினைக்கப்படும் தன்மை अनुमापकं-அனுமிதியை உண்டு பண்ணும், लिङ्गं-ஹேதுவாக ஆகிறது.

காலையில் விழித்துக்கொண்டபின் "இரவில் நான் ஸுக மாகத்தூங்கினேன்" என்று நினைவு படுத்திக் கொள்கிருன். முன்ஞல் இருந்ததைத்தான் பின்னர் நினைவு படுத்திக்கொள்ள முடியும். நினைக்கப்படும் தன்மை ஆத்மாவில் இருப்பதால், ஆத்மா உள்ளது என்பதை அநுமானத்தால் ஊகிப்பதற்கு நினைக்கப்படும் தன்மை ஹேதுவாக ஆகிறது. (605)

पुराऽनुभूतो नो चेत्तु स्मृतेरनुदयो भवेत् ।
इत्यादितर्कयुक्तिश्च सद्भावे मानमात्मनः ॥ ६०६ ॥

புராऽநுபூதோ நோ சேத்து ஸ்ம்ருதே ரநுதயோ பவேத் ।
இத்யாதிதர்கயுக்திச்ச ஸத்பாவே மாநமாத்மந: ॥

पुरा-முன்ஞல், अनुभूतो नो चेत्-அனுபவிக்கப்படா விட்டால், स्मृतेः-நினைவின், अनुदयो भवेत्-உத்பத்தி ஏற்படாது, इत्यादितर्कयुक्तिश्च-இது முதலான தர்க்க யுக்தியும், आत्मनः सद्भावे-ஆத்மா இருக்கும் விஷயத்தில், मानं-ப்ரமாணம்.

முன்ஞல் அனுபவிக்கப்படாமலிருந்தால் ஞாபகமே ஏற்படாது. இது முதலான தர்க்க யுக்தியும் ஆத்மா ஸுஷுப்தியில் இருக்கிறது என்பதற்கு பிரமாணம். (606)

यत्रात्मनोऽकामयितृत्वबुद्धिः स्वप्नानवेक्षाऽपि च तत् सुषुप्तम् ।
इत्यात्मसद्भाव उदीर्यतेऽत्र श्रुत्याऽपि तस्मात् श्रुतिरत्र मानम् ॥

யத்ராத்மனோऽகாமயித்ருத்வபுத்தி:
ஸ்வப்நாநவேக்ஷாபி ச தத் ஸுஷுப்தம் ।
இத்யாத்மஸத்பாவ உதீர்யதேऽத்ர
ச்ருத்யாபி தஸ்மாத் ச்ருதிரத்ர மாநம் ॥

**यत्र**-எங்கு, **आत्मनः**-ஆத்மாவிற்கு **अकामयितृत्वबुद्धिः**-ஆசைப் படுகிற எண்ணமில்லாமையும், **स्वप्नानवेक्षाऽपि च**-ஸ்வப்னம் காணுதிருத்தலும் உள்ளதோ, **तत् सुषुप्तं**-அது ஸுஷுப்தி, **इति**-என்று, **अत्र**-இவ்விஷயத்தில், **श्रुत्या**-வேதத்தால், **आत्मसद्भावः**-ஆத்மாவின் இருப்பு, **उदीर्यते**-சொல்லப்படுகிறது, **तस्मात्**-ஆதலால், **अत्र**-இதில், **श्रुतिरपि**-வேதமும், **मानं**-ப்ரமாணம்.

"எங்கே ஆத்மாவிற்கு ஆசைப்படுகிற எண்ணமில்லேயோ எங்கே ஸ்வப்னத்தைப் பார்க்கவில்லேயோ, அது ஸுஷுப்தி" என்று மாண்டுக்ய சுருதியினுல் ஆத்மாவின் இருப்பு சொல்லப் படுகிறது. ஆகையால் இவ்விஷயத்தில் சுருதியும் பிரமாணம்.

अकामयितृता स्वप्नादर्शनं घटते कथम् ।
अविद्यमानस्य तत आत्मास्तित्वं प्रतीयते ॥ ६०८ ॥

*அகாமயித்ருதா ஸ்வப்நாதர்சனம் கடதே கதம் ।*
*அவித்யமானஸ்ய தத ஆத்மாஸ்தித்வம் ப்ரதீயதே ॥*

**अविद्यमानस्य**-இல்லாதவனுக்கு, **अकामयितृता**-ஆசைப் படாமல் இருக்கிற தன்மையும், **स्वप्नादर्शनं**-ஸ்வப்னம் காணுமையும், **कथं घटते**-எப்படிப்பொருந்துகிறது, **ततः**-ஆகையால், **आत्मास्तित्वं**-ஆத்மாவின் இருப்பு, **प्रतीयते**-அறியப்படுகிறது.

ஆசைப்படாமலிருக்கும் தன்மையும் ஸ்வப்னம் பார்க்கா மலிருப்பதும், இல்லாதவனுக்கு எப்படி முடியும்? ஆகையால் ஆத்மாவின் இருப்பு நன்கு தெரிகிறது. (608)

(அ) இவ்விதமாக சுருதி, யுக்தி, பிரத்யக்ஷம் என்கிற பிரமாணங்களினுல் ஆத்மா என்று ஒருவர் உண்டு, அவர் சரீராதிகளுக்கு வேறுபட்டவர், மற்ற விஷயங்களைப்போல அறியப்படும் பதார்த்தமில்லை, அவரே ஜாக்கிரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்கிற மூன்று நிலைகளிலும் அறிகிறவர். என்று நிருபித்துவிட்டு, இனி அவர் ஸத், சித், ஆனந்த ஸ்வரூபர் என்பதை நிர்வசனம் செய்கிருர் :—

एतैः प्रमाणैः अस्तीति ज्ञातः साक्षितया बुधैः ।
आत्माऽयं केवलः शुद्धः सच्चिदानन्दलक्षणः ॥ ६०९ ॥

ஏதை: ப்ரமாணைரஸ்தீதி ஞாத: ஸாக்ஷிதயா புதை: ।
ஆத்மாऽயம் கேவல: சுத்த: ஸச்சிதானந்த லக்ஷண: ॥

एतै: प्रमाणै:-இந்த பிரமாணங்களால், आत्मा-ஆத்மா, साक्षितया-ஸாக்ஷியாக, अस्ति-இருக்கிறார், इति-என்று, बुधै:-வித்வான்களால், ज्ञात:-அறியப்பட்டிருக்கிறார், अयं-இந்த ஆத்மா, केवल:-தனியாக இருப்பவர், शुद्ध:-தோஷமில்லாதவர், सच्चिदानन्दलक्षण:-ஸத்சித் ஆனந்த ஸ்வரூபமாயிருப்பவர்.

இந்த பிரமாணங்களினால் ஆத்மா ஸாக்ஷியாக (ஒன்றிலும் ஸம்பந்தப்படாமல் எல்லாவற்றையும் அறிபவராக) இருக்கிறார் என்று அறிவாளிகளால் அறியப்பட்டிருக்கிறது. இந்த ஆத்மா தனித்தது, சுத்தமானது, இருப்பு ஞானம் ஆனந்தம் இவைகளை லக்ஷணமாகவுடையது. (609)

सत्त्वचित्त्वानन्दतादि लक्षणं प्रत्यगात्मनः ।

ஸத்வசித்வாநந்ததாதி லக்ஷணம் ப்ரத்யகாத்மந: ।

सत्त्वचित्त्वानन्दतादि-இருக்கும் தன்மை, அறிவுத்தன்மை, ஆனந்தத்தன்மை இது முதலியவை, प्रत्यगात्मन:-பிரத்யகாத்மாவின், लक्षणं-லக்ஷணம்.

இருக்கும் தன்மை, அறிவுத்தன்மை, ஆனந்தத்தன்மை முதலியது பிரத்யக் (உள்ளிருக்கும்) ஆத்மாவின் லக்ஷணம்.

(அ) இம்மூன்று தன்மைகளும் ஆத்மாவிற்கு எதனால் சொல்லப்படுகிறதென்று முதலில் சுருக்கமாகச் சொல்லிவிட்டு பிறகு தனித்தனியே எடுத்துக்கொண்டு விஸ்தாரமாகச் சொல்கிறார் :—

कालत्रयेऽप्यबाध्यत्वं सत्त्वं नित्यस्वरूपतः ॥ ६१० ॥

शुद्धचैतन्यरूपत्वं चित्त्वं ज्ञानस्वरूपतः ।
अखण्डसुखरूपत्वात् आनन्दत्वं इतीर्यते ॥ ६११ ॥

காலத்ரயேZப்யபாத்யத்வம் ஸத்வம் நித்யஸ்வரூபதः ॥
சுத்தசைதன்யரூபத்வம் சித்வம் ஞானஸ்வரூபதः ।
அகண்ட ஸுகரூபத்வாத் ஆநந்தத்வமிதீர்யதே ॥

नित्यस्वरूपतः- அழிவற்ற ஸ்வரூபமானதால், कालत्रयेपि- முக்காலங்களிலும், अबाध्यत्वं - பாதிக்கப்படாத தன்மையாகிற, सत्त्वं-ஸத்வம், ज्ञानस्वरूपतः-ஞான ஸ்வரூபமாயிருப்பதால், शुद्धचैतन्यरूपत्वं-கேவலசைதன்ய ரூபமாகிற, चित्त्वं- சித்வம், अखण्डसुखरूपत्वात्-பூர்ணமான ஸுகரூபமாயிருப்பதால், आनन्दत्वं-ஆனந்தத்தன்மை, इति-என்று, ईर्यते- சொல்லப்படுகிறது.

ஆத்மாவிற்கு ஸத்த்வம் (இருக்கும் தன்மை) என்பது நித்யமானஸ்வரூபமாயிருப்பதால் சென்ற காலம் நிகழ்காலம் எதிர்காலம் என்னும் முக்காலங்களிலும்கூட பாதிக்க முடியாத தன்மை.

சித்த்வம் (சித்தாக இருக்கும் தன்மை) என்பது ஞான ஸ்வரூபமாயிருப்பதால் சுத்த சைதன்யஸ்வரூபத்தன்மை.

பரிபூர்ணமான ஸுகஸ்வரூபமாயிருப்பதால், ஆனந்தத் தன்மை என்று சொல்லப்படுகிறது. (610-611)

(அ) மேல் 6 சுலோகங்களில் ஸத்தாயிருக்கும் தன்மையை விளக்குகிறார் :—

अनुस्यूताऽऽत्मनः सत्ता जाग्रत्स्वप्नसुषुप्तिषु ।
अहमस्मीत्यतो नित्यो भवत्यात्माऽयमव्ययः ॥ ६१२ ॥

அநுஸ்யூதாZZத்மநः ஸத்தா ஜாக்ரத்ஸ்வப்ன ஸுஷுப்திஷு ।
அஹமஸ்மீத்யதோ நித்யோ பவத்யாத்மாZயமவ்யய: ॥

जाग्रत्स्वप्नसुषुप्तिषु- விழிப்பு, கனவு, நல்ல தூக்கம் இவைகளில், अहं अस्मि-நான் இருக்கிறேன், इति-என்று, आत्मनः-

सत्ता-ஆத்மாவின் இருப்பு, अनुस्यूता-தொடர்ந்து இருக்கிறது, अतः- ஆகையால், अव्ययः-குறைவில்லாத, अयं आत्मा-இந்த ஆத்மா, नित्यः-அழிவற்றவராக, भवति-ஆகிறார்,

விழிப்பு, கனவு, நல்ல தூக்கம் என்ற மூன்று நிலைகளிலும் " நான் இருக்கிறேன் " என்று ஆத்மாவின் இருப்பு (ஸத்தை) துடர்ந்தேயிருந்து வருகிறது. ஆகையினால் இந்த ஆத்மா நித்யர், குறைவற்றவர். (612)

सर्वदाऽप्यासं इत्येवाभिन्नप्रत्यय ईक्ष्यते ।
कदाऽपि नासं नेत्यस्मादात्मनो नित्यता मता ॥ ६१३ ॥

ஸர்வதாZப்யாஸமித்யேவாபிந்நப்ரத்யய ஈக்ஷ்யதே ।
கதாZபி நாஸம் நேத்யஸ்மாதாத்மநோ நித்யதா மதா ॥

सर्वदापि-எப்பொழுதும், आसं-நான் இருந்தேன், इत्येव-என்றே, अभिन्नप्रत्ययः-மாறுபடாத ஒரே எண்ணம், ईक्ष्यते-காணப்படுகிறது. न आसं-நான் இருந்ததில்லை, इति-என்ற, (எண்ணம்), कदापि-ஒருபோதும், न-காணப்படுகிறதில்லை, अस्मात्-இந்தக்காரணத்தால், आत्मनः-ஆத்மாவிற்கு, नित्यता-நித்யமாயிருக்கும் தன்மை, मता-கருதப்பட்டிருக்கிறது.

" எப்பொழுதும்கூட நான் இருந்திருக்கிறேன் " என்றே வேறுபடாத எண்ணம் காணப்படுகிறது 'நான் இருந்ததில்லை' என்ற எண்ணம் ஒருபொழுதும் காணப்படுகிறதில்லை இந்த காரணத்தினால் ஆத்மாவிற்கு நித்யமாயிருக்கும் தன்மை எண்ணப்படுகிறது. (613)

आयातासु गतासु शैशवमुखावस्थासु जाग्रन्मुखा-
स्वन्यास्वप्यखिलासु वृत्तिषु धियो दुष्टास्वदुष्टास्वपि ।
गङ्गाभङ्गपरम्परासु जलवत् सत्ताऽनुवृत्ताऽऽत्मनः
तिष्ठत्येव सदा स्थिराऽहमहमित्येकात्मना साक्षिणः ॥ ६१४ ॥

ஆயாதாஸு கதாஸு சைசவமுகாவஸ்த்தாஸு
ஜாக்ரன்முகா
ஸ்வந்யாஸ்வப்யகிலாஸு வ்ருத்திஷு தியோ
துஷ்டாஸ்வதுஷ்டாஸ்வபி ।

*கங்காபங்க பரம்பராஸு ஜலவத்*
*ஸத்தாऽநுவ்ருத்தாऽऽத்மந:*
*திஷ்டத்யேவ ஸதா ஸ்திராऽஹமஹமித்யேகாத்மநா*
*ஸாக்ஷிண: ॥*

शैशवमुखावस्थासु-பால்யம் முதலிய அவஸ்த்தைகளும், जाग्रन्मुखासु-ஜாக்ரத் முதலியவைகளும், अन्यासु - மற்றும், दुष्टासु-கெட்டதும், अदुष्टासु-நல்லதுமான, अखिलासु-எல்லா, धियः-மனதின், वृत्तिष्वपि-விருத்திகளும், आयातासु-வந்த போதிலும், गतासु अपि-சென்றபோதிலும், गङ्गाभङ्गपरंपरासु-கங்கையின் அலைகளின் வரிசைகளில், जलवत्-ஜலம் போல, साक्षिणः-ஸாக்ஷியான, आत्मनः - ஆத்மாவின், सत्ता-ஸத்தையானது, अहमहमिति - நான் நான் என்று, स्थिरा-மாருமல், सदा-எப்பொழுதும், एकात्मना-ஒரே ஸ்வரூபமாக, अनुवृत्ता-தொடர்ந்து, तिष्ठत्येव-இருந்தே வருகிறது.

பால்யம் முதலிய அவஸ்தைகளும், ஜாக்ரத் முதலிய அவஸ்தைகளும் மற்றும் நல்லதும் கெட்டதுமான புத்தியின் எல்லா விருத்திகளும் மாறிமாறி வந்தாலும் போனாலும் கங்கையின் அலைவரிசைகளில் தண்ணீர்போல ஸாக்ஷியான ஆத்மாவின் ஸத்தையானது 'நான், நான்" என்று மாருமல் எப்பொழுதும் ஒரே ஸ்வரூபமாகத் தொடர்ந்து இருக்கிறது.

**प्रतिपदं अहमादयो विभिन्नाः क्षणपरिणामितया विकारिणस्ते ।**
**न परिणतिरमुष्य निष्कलत्वात् अयं अविकार्यत एव नित्य आत्मा ॥**

*ப்ரதிபதமஹமாதயோ விபிந்நா:*
*க்ஷணபரிணாமிதயா விகாரிணஸ்தே ।*
*ந பரிணதிரமுஷ்ய நிஷ்கலத்வாத்*
*அயமவிகார்யத ஏவ நித்ய ஆத்மா ॥*

प्रतिपदं-ஒவ்வொரு அடியிலும், अहमादयः-அஹங்காரம் முதலியவைகள் विभिन्नाः - வெவ்வேருனவை, क्षणपरिणामितया-ஒவ்வொருக்ஷணமும் மாறுதலுடன் கூடியதாக இருப்பதால், ते-அவைகள், विकारिणः-விகாரமுள்ளவை,

निष्कलत्वात्–அவயவமில்லாததால், अमुष्य இந்த ஆத்மா விற்கு, परिणतिः-பரிணாமம், न-இல்லை, अयं-இந்த ஆத்மா अविकारी–விகாரமில்லாதது, अत एव–ஆதலாலேயே, आत्मा-नित्यः–ஆத்மா நித்யமானது

அஹங்காரம் முதலியவை ஒவ்வொரு அடியிலும் வேறு பட்டுக்கொண்டு க்ஷணத்தில் மாறிவிடும் ஸ்வபாவமுள்ளதால் அவை விகாரத்தையடையும் தன்மையுடையவை. இந்த ஆத்மாவிற்கு கலைகள் (அவயவங்கள்) கிடையாததினால் மாறுதல் கிடையாது. இவர் விகாரமற்றவர். அதினாலேயே ஆத்மா நித்யர்தான். (615)

यः स्वप्नं अद्राक्षं अहं सुखं यो-
ऽस्वाप्सं स एवास्म्यथ जागरूकः ।
इत्येवमच्छिन्नतयाऽनुभूयते
सत्ताऽऽत्मनो नास्ति हि संशयोऽत्र ॥ ६१६ ॥

ய: ஸ்வப்னமத்ராக்ஷமஹம் ஸுகம் யோ-
ऽஸ்வாப்ஸம் ஸ ஏவாஸ்ம்யத ஜாகரூக: ।
இத்யேவமச்சிந்நதயாऽனுபூயதே
ஸத்தாऽऽத்மனோ நாஸ்தி ஹி ஸம்சயோऽத்ர ॥

यः अहं–எந்த நான், स्वप्नं–ஸ்வப்னத்தை, अद्राक्षं-பார்த்தேனோ, यः–எந்த நான், सुखं–ஸுகமாக, अस्वाप्सं–தூங்கினேனோ, स एव–அந்த நானே, अथ–பிறகு, जागरूकः–விழித்துக்கொண்டிருக்கிறவனாக, अस्मि-இருக்கிறேன், इत्येवं-என்று இவ்விதமாக आत्मनः सत्ता–ஆத்மாவின் ஸத்தையானது, अच्छिन्नतया-விடாமல் தொடர்ந்து, अनुभूयते-அனுபவிக்கப்படுகிறது, अत्र - இவ்விஷயத்தில், संशयः-ஸந்தேஹம், नास्ति हि–இல்லை.

"எந்த நான் ஸ்வப்னத்தைக் கண்டேனோ, எந்த நான் ஸுகமாகத் தூங்கினேனோ, அந்த நானே இப்பொழுது விழித்துக்கொண்டிருக்கிறேன்" என்று இவ்விதமாக விட்டுப் போகாமல் ஆத்மாவின் ஸத்தை அனுபவிக்கப்படுகிறது, இதில் ஸந்தேஹமேயில்லை என்பது பிரஸித்தம். (616)

(அ) பிரச்னோபநிஷத் முதலியவிடங்களில் ஆத்மா 16 கலைகளுள்ளவன் என்று சொல்லியிருக்கிறதே, இங்கே கலைகள் கிடையாதென்று சொல்கிறீர்களே என்று ஸந்தேகம் ஏற்படக் கூடியதால், அங்கு சொல்லப்பட்டிருக்கும் ஆத்மா சுத்த சைதன்யமில்லையென்பதைக் காட்டுகிறார் :—

श्रुत्युक्ताः षोडशकलाः चिदाभासस्य नात्मनः ।

ச்ருத்யுக்தா: ஷோடச கலாஸ் சிதாபாஸஸ்ய நாத்மந: ।

श्रुत्युक्ताः–உபநிஷத்தில சொல்லப்பட்ட, षोडश कलाः–பதினாறு கலைகள், चिदाभासस्य–சிதாபாஸனுக்கு, न आत्मनः–ஆத்மாவிற்கு அல்ல.

வேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் 16 கலைகள் சைதன்யத்தின் பிரதிபிம்பமான ஜீவனுக்கே தவிர, ஆத்மாவிற்கு இல்லை.

निष्कलत्वात् नास्य लयः तस्मात् नित्यत्वं आत्मनः ॥ ६१७॥

நிஷ்கலத்வாத் நாஸ்ய லயஸ் தஸ்மாத் நித்யத்வமாத்மந: ॥

अस्य–இந்த ஆத்மாவுக்கு, निष्कलत्वात्–அவயவங்கள் இல்லாததால், न लयः–நாசம் கிடையாது, तस्मात्–ஆகையால், आत्मनः–ஆத்மாவிற்கு, नित्यत्वं–நித்யத்தன்மை.

அவயவங்களில்லாத காரணத்தினால் இவருக்கு லயமும் கிடையாது. ஆகையால் ஆத்மாவிற்கு நித்யமாயிருக்கும் தன்மை ஸித்தம். (617)

(அ) இனி ஆத்மா சித், அதாவது ஞானஸ்வரூபர், என்று 5 சுலோகங்களில் விளக்குகிறார் :—

जडप्रकाशकः सूर्यः प्रकाशात्मैव नो जडः ।
बुद्ध्यादिभासकः तस्मात् चित्स्वरूपः तथा मतः ॥ ६१८ ॥

ஜடப்ரகாசக: ஸூர்ய: ப்ரகாசாத்மைவ நோ ஜட: ।
புத்த்யாதிபாஸகஸ் தஸ்மாத் சித்ஸ்வரூபஸ் ததா மத: ॥

जडप्रकाशकः-ஜடவஸ்துக்களை பிரகாசிக்கச் செய்கிற, सूर्यः-ஸூரியன், प्रकाशात्मैव-பிரகாச ஸ்வரூபம் தான், नो जडः-ஜடப்பொருள் அல்ல. तथा-அப்படியே, बुध्यादिभासकः-புத்தி முதலியவைகளை பிரகாசிக்கச் செய்யும் ஆத்மா, तस्मात्-அந்த காரணத்தால், चित्स्वरूपः-ஞானஸ்வரூபனாக, मतः-கருதப்பட்டிருக்கிறான்.

ஜடமான பதார்த்தங்களை பிரகாசிக்கும்படிச் செய்யும் ஸூர்யன் பிரகாசஸ்வரூபனேதான், ஜடமல்ல. அப்படியே ஜடமான புத்தி முதலியதை பிரகாசிக்கச் செய்யும் ஆத்மா அதே காரணத்தினால் ஞானஸ்வரூபனென்று தீர்மானிக்கப் படுகிறது. (618)

कुड्यादेस्तु जडस्य नैव घटते भानं स्वतः सर्वदा
सूर्यादिप्रभया विना क्वचिदपि प्रत्यक्षमेतत् तथा ।
बुद्ध्यादेरपि न स्वतोऽस्त्यणुरपि स्फूर्तिः विनैवात्मना
सोऽयं केवलचिन्मयः श्रुतिमतो भानुर्यथा रुङ्मयः ॥ ६१९ ॥

குட்யாதேஸ்து ஜடஸ்ய நைவ கடதே பாநம் ஸ்வத: ஸர்வதா
ஸூர்யாதிப்ரபயா விநா க்வசிதபி ப்ரத்யக்ஷமேதத் ததா ।
புத்த்யாதேரபி ந ஸ்வதோऽஸ்த்யணுரபி ஸ்பூர்திர் விநைவாத்மநா
ஸோऽயம் கேவலசின்மய: ச்ருதிமதோ பாநுர் யதா ருங்மய: ॥

जडस्य-ஜடமான, कुड्यादेस्तु-சுவர் முதலியவற்றிற்கு, सूर्यादिप्रभया विना-ஸூரியன் முதலியவைகளின் ஒளி இல்லாமல், सर्वदा-எப்பொழுதும், क्वचिदपि-ஒரு இடத்திலும், स्वतः-தானாகவே, भानं-பிரகாசிப்பது, नैव घटते-ஏற்படாது, एतत्-இது, प्रत्यक्षं-நேரில் கண்ட விஷயம், तथा-அப்படியே, बुध्यादेरपि-புத்தி முதலியவற்றிற்கும், विनैव आत्मना-ஆத்மா இல்லாமல், स्वतः-தானாகவே, अणुरपि-கொஞ்சம் கூட, स्फूर्तिः-பிரகாசம், नास्ति-இல்லை. यथा-எப்படி, भानुः-ஸூர்யன்,

रूपमयः-பிரகாசமயனே (அப்படியே), सः अयं-அந்த இந்த ஆத்மாவும், केवलचिन्मयः-சைதன்யத்தை மட்டும் ஸ்வரூபமாகக்கொண்டவனாக, श्रुतिमतः-வேதங்களால் கருதப்பட்டிருக்கிறான்.

ஜடமாயிருக்கும் சுவர் முதலியதிற்கோ எக்காலத்திலும் எவ்விடத்திலும், ஸூர்யன் முதலானதின் பிரகாசமில்லாமல், தானாகவே பிரகாசம் என்பது ஏற்படவே ஏற்படாது. இது எல்லாருக்கும் பிரத்யக்ஷமாய் நேரில் தெரிந்த விஷயம். அப்படியே புத்தி முதலானதிற்கும், ஆத்மா இல்லாமல் தானாகவே பிரகாசமென்பது கொஞ்சம்கூடக் கிடையாது. எப்படி ஸூர்யன் பிரகாசமயனாகவேயிருக்கிறாரோ, அப்படியே இந்த ஆத்மாவும் தனித்த ஞானமயன் என்று வேதம் மதிக்கிறது. (619)

स्वभासने वाऽन्यपदार्थभासने
नार्कः प्रकाशान्तरं ईषदिच्छति ।
स्वबोधने वाऽप्यहमादिबोधने
तथैव चिद्धातुः अयं परात्मा ॥ ६२० ॥

*ஸ்வபாஸனே வாऽந்யபதார்த்தபாஸனே*
*நார்க்க: ப்ரகாசாந்தரமீஷதிச்சதி ।*
*ஸ்வபோதனே வாऽப்யஹமாதிபோதனே*
*ததைவ சித்தாதுரயம் பராத்மா ॥*

अर्कः-ஸூர்யன், स्वभासने - தன்னை பிரகாசப்படுத்துவதிலோ, अन्यपदार्थभासने वा-வேறு பொருள்களை பிரகாசப்படுத்துவதிலோ, प्रकाशान्तरं-வேறு ஒளியை, ईषत्-கொஞ்சம் கூட, न इच्छति-அபேக்ஷிக்கிறதில்லை. चिद्धातुः-சைதன்ய ஸ்வரூபனான, अयं परात्मापि-இந்த பரமாத்மாவும், स्वबोधने-தான் பிரகாசிப்பதிலோ, अहमादिबोधने वा-அஹங்காரம் முதலியவைகளை பிரகாசப்படுத்துவதிலோ, तथैव - அப்படியே தான், (ஒன்றையும் எதிர்பார்ப்பதில்லை.)

தன்னை பிரகாசப்படுத்துவதிலோ வேறு பதார்த்தத்தை பிரகாசப்படுத்துவதிலோ, ஸூர்யன் வேறு பிரகாசத்தை

கொஞ்சமேனும் அபேக்ஷிக்கிறதில்லை. அப்படியே இந்த ஞானஸ்வரூபனான பரமாத்மாவும் தன்னைத் தெரியப்படுத்துவதிலோ அஹங்காரம் முதலியதைத் தெரியும்படி செய்வதிலோ வேறு ஞானத்தை அபேக்ஷிக்கிறதில்லை. (620)

अन्यप्रकाशं न किमप्यपेक्ष्य
यतोऽयमाभाति निजात्मनैव ।
ततः स्वयंज्योतिरयं चिदात्मा
न ह्यात्मभाने परदीप्त्यपेक्षा ॥ ६२१ ॥

அந்யப்ரகாசம் ந கிமப்யபேக்ஷ்ய
யதோऽயமாபாதி நிஜாத்மனைவ ।
தத: ஸ்வயம் ஜ்யோதிரயம் சிதாத்மா
ந ஹ்யாத்மபாநே பரதீப்த்யபேக்ஷா ॥

यतः-எந்தக்காரணத்தால், अयं-இந்த ஆத்மா, अन्यप्रकाशं-வேறு பிரகாசத்தை, किमपि-கொஞ்சமும், न अपेक्ष्य-எதிர்பார்க்காமல், निजात्मनैव-தன் ஸ்வரூபத்தினாலேயே, आभाति-பிரகாசிக்கிறாரோ, ततः-ஆகையால், अयं-இந்த, चिदात्मा-ஞானரூபியான ஆத்மா, स्वयंज्योतिः-தானாகவே பிரகாசிக்கிறவர், आत्मभाने-ஆத்மா பிரகாசிப்பதில், परदीप्त्यपेक्षा வேறு பிரகாசத்தின் அபேக்ஷை, नहि-இல்லையல்லவா!

வேறு பிரகாசத்தை கொஞ்சமும் அபேக்ஷிக்காமல் தன் ஸ்வரூபத்தினாலேயே இவர் பிரகாசிக்கிறார் என்ற காரணத்தினால், இந்த ஞான ஸ்வரூபனான ஆத்மா ஸ்வயம் ஜ்யோதிஸ் (தானே பிரகாசிப்பவர்). தானே பிரகாசிக்கும்போது, வேறு பிரகாசத்தின் அபேக்ஷை கிடையாதல்லவா? (621)

यं न प्रकाशयति किंचिदिनोऽपि चन्द्रः
नो विद्युतः किमुत वह्निरयं मिताभः ।
यं भान्तमेतमनुभाति जगत्समस्तं
सोऽयं स्वयं स्फुरति सर्वदशासु चात्मा ॥ ६२२ ॥

யம் ந ப்ரகாசயதி கிஞ்சிதிநோऽபி சந்த்ர:
நோ வித்யுத: கிமுத வஹ்னிரயம் மிதாப: ।
யம் பாந்தமேதமநுபாதி ஜகத் ஸமஸ்தம்
ஸோऽயம் ஸ்வயம் ஸ்புரதி ஸர்வதசாஸு சாத்மா ॥

यं-எந்த ஆத்மாவை, इनः-ஸூரியனும், चन्द्रोपि-சந்திரனும், किंचित्-கொஞ்சம் கூட, न प्रकाशयति-பிரகாசப் படுத்தாதோ, विद्युतः-மின்னல்கள், नो-பிரகாசப்படுத்தாதோ अयं वह्निः-இந்த அக்னி, मिताभः-கொஞ்சமான ஒளி யுள்ளவன், किमुत-இவன் பிரகாசப்படுத்தமாட்டான் என்பது பற்றி சொல்லவேண்டுமா? भान्तं-பிரகாசிக்கிற, यं एतं-எந்த இந்த ஆத்மாவை, समस्तं जगत्-எல்லா பிரபஞ்சமும், अनुभाति-அநுஸரித்து பிரகாசிக்கிறதோ, सोऽयं आत्मा-அந்த இந்த ஆத்மா, सर्वदशासु-எல்லா நிலைகளிலும், स्वयं-தானே, स्फुरति-பிரகாசிக்கிறான்.

எவரை ஸூர்யன் கொஞ்சமேனும் பிரகாசப்படுத்தாதோ, அப்படியே சந்திரனும், மின்னல்களும் பிரகாசப்படுத்தாதோ, மிகவும் குறைந்த பிரகாசத்துடன் கூடிய இந்த அக்னி பிரகாசப்படுத்தாதென்று சொல்லவேண்டுமா? பிரகாசிக்கிற எந்த இவரை அனுஸரித்து எல்லா உலகமும் பிரகாசிக் கிறதோ, அந்த ஆத்மா எல்லா நிலைகளிலும் தானே பிரகாசித்துக்கொண்டிருக்கிறார். (622)

(அ) மேலால் 9 சுலோகங்களால் ஆத்மா ஆனந்த ஸ்வரூபர் என்பதை விவரிக்கிறார்:—

आत्मनः सुखरूपत्वादानन्दत्वं स्वलक्षणम् ।
परप्रेमास्पदत्वेन सुखरूपत्वमात्मनः ॥ ६२३ ॥

ஆத்மந: ஸுகரூபத்வாதாநந்தத்வம் ஸ்வலக்ஷணம் ।
பரப்ரேமாஸ்பதத்வேந ஸுகரூபத்வமாத்மந: ॥

आत्मनः सुखरूपत्वात्-ஆத்மா ஸுகரூபமாக இருப்பதால், आनन्दत्वं-ஆநந்தத்தன்மை, स्वलक्षणं-ஸ்வரூபலக்ஷணமாகிறது, आत्मनः-ஆத்மா, परप्रेमास्पदत्वेन-மேலான பிரீதிக்கு

விஷயமாக இருப்பதால், **सुखरूपत्वं**-ஸுகருபமாக இருக்கும் தன்மை இருக்கிறது.

ஆத்மா ஸுக ஸ்வருபமாயிருப்பதினுல் ஆனந்தத்தன்மை ஆத்மாவிற்கு லக்ஷணமாகிறது. ஆத்மா மேலான பிரீதிக்கு விஷயமாயிருத்தலால், அதற்கு ஸுக ஸ்வருபத்தன்மை. (623)

सुखहेतुषु सर्वेषां प्रीतिः सावधिरीक्ष्यते ।
कदाऽपि नावधिः प्रीतेः स्वात्मनि प्राणिनां क्वचित् ॥ ६२४ ॥

*ஸுகஹேதுஷு ஸர்வேஷாம் ப்ரீதி: ஸாவதி ரீக்ஷ்யதே ।*
*கதாபி நாவதி: ப்ரீதே: ஸ்வாத்மநி ப்ராணிநாம் க்வசித் ॥*

**सर्वेषां**-எல்லோருக்கும், **सुखहेतुषु**-ஸுகத்திற்கு ஸாதனமான வஸ்துக்களில், **प्रीतिः**-ப்ரீதியானது, **सावधिः**-எல்லையுள்ளதாக, **ईक्ष्यते**-காணப்படுகிறது, **प्राणिनां**-பிராணிகளுக்கு **कदापि**-ஒருபோதும், **क्वचित्**-ஒரு இடத்திலும், **स्वात्मनि**-தனது ஆத்மாவில் உள்ள, **प्रीतेः**-ப்ரீதிக்கு, **अवधिः**-எல்லை, **न**-இல்லை.

எல்லாருக்குமே ஸுகத்திற்கு ஸாதனமாயிருக்கும் பதார்த்தங்களில் உள்ள பிரீதி எல்லையுள்ளதாகவே காணப்படுகிறது. பிராணிகளுக்கு தன்னிடத்திலுள்ள பிரீதிக்கு மாத்திரம் எப்பொழுதாவது எங்கேயாவது எல்லையென்பது கிடையாது. (624)

क्षीणेन्द्रियस्य जीर्णस्य संप्राप्तोत्क्रमणस्य वा ।
अस्ति जीवितुमेवाशा स्वात्मा प्रियतमो यतः ॥ ६२५ ॥

*க்ஷீணேந்த்ரியஸ்ய ஜீர்ணஸ்ய ஸம்ப்ராப்தோத்*
*க்ரமணஸ்ய வா ।*
*அஸ்தி ஜீவிதுமேவாசா ஸ்வாத்மா ப்ரியதமோ யத: ॥*

**यतः**-எதனுல் **स्वात्मा**-தனது ஆத்மா **प्रियतमः**-மிகுந்த பிரியமானதோ (அதனுல்) **क्षीणेन्द्रियस्य**-இந்திரிய பலம் குறைந்தவனுக்கோ, **जीर्णस्य** - ஜரையடைந்தவனுக்கோ, **संप्राप्तोत्क्रमणस्य वा**-பிராணன் வெளியே போகும் நிலையை

அடைந்தவனுக்கோ, जीवितुमेव-வாழ்வதற்குத்தான், आशा-ஆசை, अस्ति-இருக்கிறது.

தன் ஆத்மா மிகவும் பிரியமாய் இருப்பதினால்தான், இந்திரியங்கள் சக்தி குறைந்து, ஜீர்ணமாகி, மரணம் நெருங்கியிருப்பவனுக்கும் ஜீவித்து இருக்கவேண்டுமென்ற ஆசை இருந்துகொண்டேயிருக்கிறது. (625)

आत्माऽतः परमप्रेमास्पदः सर्वशरीरिणाम् ।
यस्य शेषतया सर्वमुपादेयत्वमृच्छति ॥ ६२६ ॥

ஆத்மாZத: பரமப்ரேமாஸ்பத: ஸர்வசரீரிணாம் ।
யஸ்ய சேஷதயா ஸர்வமுபாதேயத்வம் ருச்சதி ॥

अतः – ஆகையால், सर्वशरीरिणां – சரீரமுள்ளவர்கள் எல்லோருக்கும், आत्मा – ஆத்மா, परमप्रेमास्पदः – மேலான ப்ரீதிக்கு விஷயமாக இருக்கிறது, यस्य-எந்த ஆத்மாவிற்கு, शेषतया-அங்கமாயிருப்பதால், सर्वं –எல்லாம், उपादेयत्वं – வேண்டப்படும் தன்மையை, ऋच्छति-அடைகிறது.

ஆகையினால் சரீரமுள்ளவர்கள் எல்லோருக்கும் ஆத்மா தான் மேலான பிரீதிக்குப் பாத்திரம். அதற்கு அங்கமாய் இருக்கும் தன்மையினால்தான் எல்லாம் வேண்டப்படும் தன்மையை (எடுத்துக்கொள்ளக்கூடிய தன்மையை) அடைகிறது. (626)

एष एव प्रियतमः पुत्रादपि धनादपि ।
अन्यस्मादपि सर्वस्मादात्माऽयं परमान्तरः ॥ ६२७ ॥

ஏஷ ஏவ ப்ரியதம: புத்ராதபி தநாதபி ।
அந்யஸ்மாதபி ஸர்வஸ்மாத் ஆத்மாZயம் பரமாந்தர: ॥

एष एव-இந்த ஆத்மா தான், पुत्रादपि-புத்திரனைக் காட்டிலும், धनादपि-பணத்தைக்காட்டிலும், अन्यस्मात्-மற்ற सर्वस्मादपि-எல்லாவற்றைக்காட்டிலும், प्रियतमः – மிகவும்

பிரியமானது, अयं आत्मा-இந்த ஆத்மா, परमान्तरः-எல்லா வற்றிற்கும் உள்ளே இருப்பது

இந்த ஆத்மாதான் புத்திரனையும்விட, செல்வத்தையும் விட, மேலான பிரியமான பதார்த்தம் வேறு எல்லா வற்றையும்விட பிரியமானது. இந்த ஆத்மா மிகவும் உள்ளே யுள்ளது. (627)

प्रियत्वेन मतं यत्तु तत्सदा न प्रियं नृणाम् ।
विपत्तावपि संपत्तौ यथाऽऽत्मा न तथाऽपरः ॥ ६२८ ॥

ப்ரியத்வேந மதம் யத்து தத் ஸதா ந ப்ரியம் ந்ருணாம் ।
விபத்தாவபி ஸம்பத்தௌ யதாzzத்மா ந ததாzபர: ॥

यत्-எந்த வஸ்து, नृणां-மனிதர்களுக்கு, प्रियत्वेन-பிரிய மாக, मतं-கருதப்பட்டிருக்கிறதோ, तत्-அது, सदा-எப் பொழுதும், न प्रियं-பிரியமாக இருப்பதில்லை. विपत्तौ-ஆபத்திலும், संपत्तावपि-ஸம்பத்திலும், आत्मा-ஆத்மா, यथा-எப்படி பிரியமோ, तथा-அப்படி, अपरः-வேறு வஸ்து, न-பிரியமில்லை.

எந்த பதார்த்தம் பிரியமென்று எண்ணப்படுகிறதோ அது மனிதர்களுக்கு எப்பொழுதும் பிரியமாக இல்லை. ஆத்மா எப்படி ஆபத்துக்காலத்திலும் ஸம்பத்துக்காலத் திலும் பிரியமாகவே இருக்கிறதோ, அப்படி வேறு பதார்த்தம் இருப்பதில்லை. (628)

आत्मा खलु प्रियतमोऽसुभृतां यदर्था
भार्यात्मजाप्तगृहवित्तमुखाः पदार्थाः ।
वाणिज्यकर्षणगवावनराजसेवा-
भैषज्यकप्रभृतयो विविधाः क्रियाश्च ॥ ६२९ ॥

ஆத்மா கலு ப்ரியதமோzஸுப்ருதாம் யதர்த்தா
பார்யாத்மஜாப்த க்ருஹவித்தமுகா: பதார்த்தா: ।
வாணிஜ்ய கர்ஷண கவாவந ராஜஸேவா
பைஷஜ்யக ப்ரப்ருதயோ விவிதா: க்ரியாச்ச ॥

भार्यात्मजाप्त—மனைவி, புத்திரன், நண்பன், गृहवित्तमुखाः-வீடு, பணம் முதலான, पदार्थाः-பொருள்களும, वाणिज्य-வியாபாரம், कर्षण-உழவு, गवावन-கோஸம்ரக்ஷணம், राजसेवा-ராஜஸேவை, भैषज्यकप्रभृतयः-வைத்யம் முதலான, विविधाः-பலவிதமான, क्रियाश्च-செய்கைகளும், यदर्थाः எந்த ஆத்மாவுக்காக உள்ளவையோ (அந்த), आत्मा खलु-ஆத்மா அல்லவா, असुभृतां-பிராணிகளுக்கு, प्रियतमः-மிகவும் பிரியமானது.

பார்யை, புத்திரன், மித்ரன், வீடு, பணம் முதலான பதார்த்தங்களும், வியாபாரம், உழுதல், கோஸம்ரக்ஷணம், ராஜஸேவை, வைத்தியம் முதலான பலவித செய்கைகளும் எதினுடைய பிரயோஜனத்திற்காகவோ, அந்த ஆத்மா பிராணனை தரிக்கும் யாவருக்கும் உத்தமமான பிரியமான வஸ்துவல்லவா? (629)

प्रवृत्तिश्च निवृत्तिश्च यच्च यावच्च चेष्टितम् ।
आत्मार्थमेव नान्यार्थं नातः प्रियतमः परः ॥ ६३० ॥

ப்ரவ்ருத்திச்ச நிவ்ருத்திச்ச யச்ச யாவச்ச சேஷ்டிதம் ।
ஆத்மார்த்தமேவ நாந்யார்த்தம் நாதः ப்ரியதம: பர: ॥

प्रवृत्तिश्च-ப்ரவ்ருத்தியும், निवृत्तिश्च-நிவ்ருத்தியும், यच्च यावच्च चेष्टितं-எலலா செய்கையும, आत्मार्थमेव-தனககாகவே தான், न अन्यार्थं-பிறருக்காக அல்ல, अतः-இந்த ஆத்மாவைக்காட்டிலும, परः-மேலான, प्रियतमः-மிகவும பிரியமானது, न-இல்லை.

காரியத்தைச் செய்வதும், செய்யாமலிருப்பதும், மற்றும் எல்லாச்செய்கையும் ஆத்மாவிற்காகத்தான் வேறு எதற்காகவும் இல்லை. இதைவிட மேலான பிரியமானது வேறு எதுவும் கிடையாது. (630)

तस्मादात्मा केवलानन्दरूपो
यः सर्वस्माद्वस्तुनः प्रेष्ठ उक्तः ।

यो वा अस्मान्मन्यतेऽन्यं प्रियं यं
सोऽयं तस्माच्छोकमेवानुभुङ्क्ते ॥ ६३१ ॥

*தஸ்மாதாத்மா கேவலாநந்தரூபோ*
*ய: ஸர்வஸ்மாத் வஸ்துந: ப்ரேஷ்ட உக்த: ।*
*யோ வா அஸ்மான் மந்யதேऽந்யம் ப்ரியம் யம்*
*ஸோऽயம் தஸ்மாத் சோகமேவாநுபுங்க்தே ॥*

**तस्मात्**–ஆகையால், **यः**–எது, **सर्वस्मात् वस्तुनः**–எல்லா வஸ்துவைக்காட்டிலும், **प्रेष्ठः**–மிகவும் பிரியமாக, **उक्तः**–சொல்லப்பட்டதோ, **आत्मा**–இந்த ஆத்மா, **केवलानन्दरूपः**–சுத்த ஆனந்தஸ்வரூபம், **यो वा**–எவன் ஒருவன், **अस्मात्**–இந்த ஆத்மாவைக்காட்டிலும், **अन्यं**–வேறான, **यं**–எதை, **प्रियं**–பிரியமாக, **मन्यते**–எண்ணுகிறானோ, **सोऽयं**–அந்த இவன், **तस्मात्**–அதினால், **शोकमेव**–துன்பத்தையே, **अनुभुङ्क्ते**–அனுபவிக்கிறான்.

ஆகையால் எவர் எல்லா வஸ்துக்களையும்விட மிகப் பிரியமென்று சொல்லப்பட்டதோ, அந்த ஆத்மா சுத்தமான ஆனந்த ஸ்வரூபர். எவன் ஒருவன் இந்த ஆத்மாவைக் காட்டிலும் வேறான எந்தப்பொருளை பிரியமாக நினைக்கிறானோ அவன் அதிலிருந்து துன்பத்தைத்தான் அனுபவிப்பான் (பிருஹதாரண்யக உபநிஷத்தில் முதலாவது அத்யாயம் 4-வது பிராஹ்மணம் 8-வது மந்திரத்தில் இவ்விஷயம் கூறப்பட்டுள்ளது. (631)

---

